




# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"



சேக்கிழார் சுவாமிகள்

மாலை 5] சுபகிருது - பங்குனி — ஏப்ரல் '63 [மணி 7



சென்னை அரசாங்க அறநிலையப் பாதுகாப்புத் துறை வெளியீடு.



குன்றத்தூர்த் திருமலைப் பாதைத் திறப்பு விழாவில்,
அறநிலைய அமைச்சர் அவர்கள் உரையாற்றுதல். (22-2-63)



## பொருள் அடக்கம்




ஆண்டுச் சந்தா ரூ. 10/-



தனி இதழ் விலை ரூ. ஒன்று


## சந்தாதாரர்களுக்கு வேண்டுகோள்

சந்தாப்பணம் நிலுவையுள்ள சந்தாதாரர்கள், தம் நிலுவைச் சந்தாப் பணத்தையும், 1962-63 புதிய ஆண்டுக்கான சந்தாப் பணத்தையும், விரைவில் அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையாளர் அலுவலகங்களில் செலுத்திவிடுமாறு, நினைவூட்டிக் கேட்டுக் கொள்ளப் பெறுகின்றார்கள்.

—ஆசிரியர்




மாலை 5] சுபகிருது பங்குனி - ஏப்ரல் 1963 [மணி 7

# திருவல்லம்

—( ❁ )—



திருவலம் கோயில்

ஆரூர் தில்லை அம்பலம் வல்லம் நல்லம்
வடகச்சியும் அச்சிறு பாக்கம் நல்ல
கூரூர் குடவாயில் குடந்தை வெண்ணி
கடல்சூழ் கழிப்பாலை தென்கோடி பீடார்
நீருர்வயல் நின்றியூர் குன்றியூரும்
குருகாவையூர் நாரையூர் நீடுகானப்
பேரூர்நல் நீள்வயல் நெய்த்தானமும்
பிதற்றாய் பிறைசூடி தன் பேரிடமே

—சம்பந்தர், திருப்பதிக் கோவை

## முன்னுரை

தொண்டை நாட்டில் உள்ள பாடல் பெற்ற தலங்களுள் திருவல்லம் என்பது ஒன்று. இதனை இப்போது 'திருவலம்' என்று மக்கள் வழங்கி வருகின்றனர். விநாயகர் அம்மையப்பரை வலம் வந்து மாங்கனிபெற்றவரலாற்றை இதனோடு இணைத்துக் கூறி, அதனால் இது 'திருவலம்' எனப் பெயர் பெற்றது என்றும் சிலர் கூறுவர்.

இத்தலம் வட ஆர்க்காடு மாவட்டத்தில், வேலூருக்கு அருகில், சென்னையில்



கோயிலின் ஒரு பகுதி

இருந்து 75 கல் தொலைவில், சென்னை பெங்களூர் நெடுஞ் சாலையில், பாலாற்றின் கிளைநதியாகிய நுகாவின் மேற்குக் கரையில் அமைந்து விளங்குகின்றது. நுகா நதியினைப் 'பொன்னை' அல்லது 'நீவா' என்னும் பெயர்களாலும் மக்கள் வழங்குகின்றனர்.

### தீக்காலி வல்லம்

வல்லம் என்ற பெயரால் தமிழ் நாட்டில் மற்றும் சில ஊர்கள் உள்ளன. தமிழிலக்கண நூல்களில்,

> "வல்லம் எறிந்த நல்லிளங்
> கோசர் தந்தை
> மல்லல் யானைப் பெருவழுதி"

என்னும் தொடர், செய்யுட்களில் வரும் இடைப்பிறவரல் (Parenthesis) என்பதனை விளக்குதற்குரிய எடுத்துக் காட்டாகப் பயின்று வரும். ஆதலின், அது போன்ற பல ஊர்களினின்று பிரித்து இதனைத் தனியே கிளந்தெடுத்துக் குறிப்பிடுதற் பொருட்டு, ஆசிரியர் **சேக்கிழார் சுவாமிகள்** தமது பெரிய புராணத்தில் இதனைத் **'தீக்காலி வல்லம்'** என அடைமொழி புணர்த்து வழங்கியருளினர். 'தீக்காலி' என்னும் அவுணன் இங்கு இறைவனை வழிபட்டு அருள் பெற்றான். ஆதலின் இதற்குத் 'தீக்காலி வல்லம்' எனப் பெயர் வழங்குவதாயிற்று. ஆண் மகப்பேறு எய்தாமல், பெண் மக்களையே மிகுதியாகப் பெற்ற அந்தணன் ஒருவன், அப் பெண் மக்கள் சிவத்தொண்டு செய்து உய்யும் திறம்பெற, இறையருளை வேண்டி வழிபட்ட சிறப்பும் இத்தலத்திற்கு உண்டு.

> "தீது நீங்கிடத் தீக்காலி
> யாம் அவுணற்கு
> நாதர் தாம் அருள் புரிந்தது ;
> நல்வினைப் பயன்செய்
> மாதர் தோன்றிய மரபுடை
> மறையவர் வல்லம்
> பூதி சாதனம் போற்றிய
> போற்பினல் விளங்கும்"

எனவரும் பெரிய புராணச் செய்யுளால் இச்செய்திகள் விளங்கும்.

இங்குள்ள இறைவனுக்கு **வல்லநாதர்** (வில்வநாதேசுவரர்) என்றும், அம்பிகைக்கு **வல்லாம்பிகை** (தனுர் மத்யாம்பாள்) என்றும் பெயர் வழங்குகின்றது. தொண்டை நாட்டில் உள்ள மருதத்திணைக்குரிய தலங்களுள் **திருவல்லம் திருமாற்பேறு திருப்பாசூர்** என்னும் மூன்றினையும் சேக்கிழார் சுவாமிகள் சிறந்தெடுத்து இயம்பியுள்ளனர்.

### இராஜராஜேசுவரம்

திருவல்லம் கோயிலுக்கு **ஸ்ரீஇராஜராஜேசுவரம்** என்ற பெயர் வழங்கிய தென்பது கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. முதலாம் இராஜராஜ சோழனின் (கி. பி. 985—1014) நான்காம் ஆட்சியாண்டில், அவ்வேந்தனின் **'திருமந்திர ஓலை நாயகம்'**ஆக விளங்கி யிருந்த **ஈராயிரவன் பல்லவரையன் ஆகிய மும்முடிச் சோழ போசன்** என்னும் தலைவன் ஒருவனால், இக்கோயிலின் கருவறை கட்டப் பெற்றது.

சிற்றரசர்களும், படைத்தலைவர் முதலிய உயர்ந்த அரசியல் அலுவலாளர்களும் தமக்குத் தலைவனாகத் திகழும் பேரரசனின் பெயரால் அறங்கள் செய்தலும், கோயில்கள் எடுப்பித்தலும் உண்டு. தம்முடைய தலைவனாகிய பேரரசனின்பால் தமக்குள்ள அன்பையும் நன்றியையும் காட்டுதற் பொருட்டு இங்ஙனம் அவர்கள் செய்வர்.

எனவே, முதலாம் இராஜராஜ சோழன்எடுப்பித்த **தஞ்சைப்பெருவுடையார்** (பிருகதீசுவரர்) கோயிலைப் போல, இதற்கும் இராஜராஜேசுவரம் எனப் பெயர் ஏற்படுவதாயிற்று. அதனால் திருவல்லநாதர்க்கு **'இராஜராஜேசுவரம் உடைய நாயனார்'** எனவும் பெயர் வழங்கும்.

### கல்வெட்டுச் செய்தி

இராஜராஜ சோழனின் பெரிய பாட்டனாரும், பக்தி ஒழுக்கத்திற் சிறந்து பல கோயில்களை எடுப்பித்த **செம்பியன் மாதேவி** அம்மையாரின் கணவரும், **திருவிசைப்பா** பாடியருளிய ஆசிரியர்களுள் ஒருவரும் ஆகிய சிவஞான கண்டராதித்தரின் (கி.பி 950—957) புதல்வன் உத்தம சோழனின் (கி. பி;970—985) மகனாகிய **மதுராந்தகன் கண்டராதித்தன்** என்பவன், முதலாம் இராசராசனின் ஆட்சிக்காலத்தில் கோயில்களைக் கண்காணித்து, அவற்றில் தவறிழைத்தவர்களைத் தண்டித்து அறநிலையங்களைப் பாதுகாத்தல் ஆகிய **ஸ்ரீ காரிய ஆராய்ச்சியில்**

கடுபட்டிருந்தான். அப்பெருந்தகை இக் கோயிலுக்கு வந்து வழிபட்டான். அது போது திருவல்ல நாதர்க்கு 1000 குடங்களால் சிறப்புத் திருமுழுக்குச் செய்யப் பெற்றது என்னும் ஒரு செய்தி கல்வெட்டாற் புலனுகின்றது.

தெள்ளாறு எறிந்த நந்தி வர்ம பல்லவன் (கி. பி. 830—854), இராசேந்திர சோழன் (கி. பி. 1030—1045), முதற் குலோத்துங்க சோழன் (கி. பி. 1073—1112), மூன்றும் குலோத்துங்க சோழன் (கி. பி. 1078—1216) முதலியவர்களுடைய காலத்துக் கல்வெட்டுக்களும் திருவல்லநாதர் கோயிலிற் காணப்பெறுகின்றன. இவற்ருல் இக் கோயிலின் பழமை, பெருமைகளை யாவரும் யுணரலாம்.

**வந்தியத்தேவன்**

இராஜராஜ சோழனின் தமக்கை ஆகிய **குந்தவைப் பிராட்டியை** மணம் புரிந்து கொண்ட **வல்லவரையன் வந்தியத் தேவன்** என்னும் சிறைச்சளுக்கிய வேந்தன், இவ் வூரைச் சேர்ந்தவன் என அறிஞர்கள் கருதுகின்றனர். (வல்லம் + அரையன் = வல்ல வரையன்). இஃது இவ் வூர்ப் பெருமக்கள் மிகவும் பெருமிதத்துடன் நினைத்து மகிழத் தகுந்த செய்தியாகும்.

**தேவார ஆசிரியர்கள்**

**திருஞான சம்பந்தர்** காஞ்சிபுரத்தை வழிபட்டதன் பின்னர், திருமாற்பேறு சென்று இறைஞ்சித் திருவல்லத்திற்கு வந்து வணங்கினர். இங்கிருந்து **இலம்பையங் கோட்டூர், திருவிற்கோலம்** (கூகம்) **தக்கோலம்**(திருவூறல்) முதலில் தலங்களை வழிபட்டார். சம்பந்தர் பாடிய தேவாரப் பதிகம் இத் தலத்திற்கு உள்ளது. அதன் கண் சுவாமிகள் இவ்வூரினைக் "கற்றவர் திருவல்லம்" என்று பாராட்டியிருப்பதும் நினைத்து மகிழ்தற்குரியது.

திருநாவுக்கரசர் இங்கு வந்ததாகத் தெரியவில்லை. அவரது பாடல் இத்தலத்திற்கு இல்லை. சேக்கிழார் பெருமான், திருநாவுக்கரசர் காஞ்சிபுரத்தில் தங்கிச் சிலகாலம் தொண்டு செய்து கொண்டிருந்தார் என்றும், அதுபோது **திருமாற்பேறு** அணைந்து தமிழ்பாடினர் என்றும், காஞ்சியினின்று **திருக்கழுக்குன்றம் திருவான்மியூர் திருமயிலை திருவொற்றியூர் திருப்பாசூர் திருவாலங்காடு** முதலிய தலங்களுக்குச் சென்றார் என்றும்தான் கூறியருள்கின்றார். திருவல்லம் பற்றி அவர் குறிப்பிட்டிலர்.

**சுந்தரமூர்த்தி சுவாமிகள்** காஞ்சிபுரத்துத் தலங்களை வணங்கிக் கொண்டு, **வன்பார்த்தான் பனங்காட்டூர்** வழிபட்டுத் **திருமாற்பேறு** சென்று, **திருவல்லம்** எய்தி இறைஞ்சினர். இங்கிருந்து **திருக்காளத்தி** சென்றார். இவ் வழிவகைகளையெல்லாம் சேக்கிழார் சுவாமிகள் ஏறத்தாழ 1000 ஆண்டுகளுக்கு முன்பே மிகத் திட்ப நுட்பமாக அரிதின் ஆராய்ந்து விளக்கிக் கூறியிருக்கும் திறம், நம்மனோரை வியப்பிலும் விம்மிதத்திலும் ஆழ்த்துகின்றது. சுந்தரரின் தேவாரத் திருப்பதிகம் இத்தலத்திற்கு இருந்திருத்தல் வேண்டும். ஆனல் அஃது இன்று நமக்குக் கிடைக்கப் பெறவில்லை.

**ஞான மூர்த்தி**

**ஞானமூர்த்தி** என்ற ஒரு துறவியால் இக்கோயிலின் அர்த்தமண்டபம், சகம் 1236 இல் கட்டப் பெற்றதாகக் கல்வெட்டினால் அறிகின்றோம். ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னர் மிகவும் பழுதடைந்து வருந்தத்தக்க நிலையில் இருந்த இத்திருக் கோயிலை, **ஸ்ரீசிவானந்த மௌன சுவாமிகள்** இறைவனின் திருவருள் துணைகொண்டு பெருமுயற்சி எடுத்து, இரண்டு மூன்று நூருயிரம் வெண்பொற் காசுகளுக்கு மேல் மதிப்பிடத் தக்க திருப்பணியைச் செய்து, இச் சுபகிருது ஆண்டில் **தைப் பொங்கல் திருநாள்** (14-1-63) அன்று கும்பாபிஷேக விழாவும் நிகழ்த்துவித்துள்ளார்கள். ஞானமூர்த்தி என்னும் பண்டைத் துறவியே, ஒருகால் இப்போது ஸ்ரீ சிவானந்த மௌன சுவாமிகளாகத் தோன்றித் திருப்பணி செய்கின்றனர் போலும்!

இந்நாளிலும்கூட இறைவனின் திருவருட் பெருக்கு ஆகிய ஊற்று வற்றிப் போய்விடாமல், தக்கவர்களுக்கு நிரம்பச் சுரந்து நலம்புரிந்துகொண்டுதான் வருகின்றது என்னும் உண்மையினை, **ஸ்ரீ சிவானந்த மௌன சுவாமிகள்** அவர்களின் செயல்கள் மூலம், நாம் இனிதுணர்ந்து இறும்பூதெய்தி இன்புறுகின்றோம்.



ஸ்ரீ சிவானந்த மவுன சுவாமிகள்
அன்பர்களுக்குத் திருநீறு அளித்தல்

## திருநீறு அளித்தலால் திருப்பணி :

**திருவானைக்கா** என்னும் புகழ்பெற்ற சிவத் தலத்தில் இறைவனே ஒரு சித்தராக எழுந்தருளி அங்குள்ள திருமதிலைக் கட்டினர் என்றும், அம்மதில் கட்டுதற்குப் பணி புரிந்த வேலையாளர்களுக்குத் திருநீற்றையே கூலியாக வழங்கினர் என்றும், அத்திருநீறு அவரவர்கள் செய்த உண்மையான வேலைக்குரிய கூலியளவு பொன்னாக மாறி வந்தது என்றும், அதனால் ஒருவரும் ஏமாற்ற முற்படாமல் ஒழுங்காக வேலை செய்தனர் என்றும், திருநீற்றையே கூலியாகக் கொடுத்துக் கட்டப்பெற்றதாகலின் அதற்குத் **திருநீற்றுத் திருமதில்** என்று பெயர் ஏற்பட்டது என்றும், பெரியவர்கள் கூறுவர்.

எல்லாம் வல்ல தனதியல்பும்,
ஈண்டும் கருமம் தமக்கியைய
வல்லார் தமக்குப் பயன் உதவும்
இயல்பும், விபூதி எனும் பெயரைப்
புல்லா நின்ற திருநீற்றின்
பொலிவும் விளங்கக் கூலிக்கு
நல்லா தரவின் நீறளிப்ப
நயந்தார் நாவற் பெருமானர்!

தெளிக்கும் திருநீ றே,தத்தம்
செய்கைக் கேற்பச் செழும்பொன்னய்க்
களிக்கும் வகைசெய் தறன் கடைகள்
கதுவா தொழிக்கும் பெருஞ்சிறப்பால்,
வெளிக்கண் ஒருத்த ரைப்போல
விளையாட் டயரும் அமுதேசற்கு
ஒளிக்கும் வகைஇன் றுய்எவரும்
உறுதி யோடு பணிபுரிவார்!

—திருவானைக்காப் புராணம்,
கச்சியப்ப முனிவர்.

திருப்போரூர்ச் **சிதம்பர சுவாமிகள்** போன்ற வேறு பிற அருளாளர்களும், இங்ஙனமே திருநீற்றைக் கூலியாகக் கொடுத்துத் திருப்பணிகள் செய்தனர் எனக் கேள்வியுறுகின்றோம். ஸ்ரீசிவானந்த மௌன சுவாமிகள் திருநீறு அளித்து, அன்பர்களுக்கு அவரவர்கள் விரும்பும் நலம் விளைத்து, அவ்வாற்றாற் பொருள் தொகுத்து, இவ்வளவு பெருஞ் செலவில் இத்திருப்பணியை மிகவும் செம்மையுறச் செய்து முடித்திருப்பது, மிகவும் வியக்கத் தக்க ஓர் அரும்பெருஞ் செயலேயாகும்,

## சுவாமிகளின் சிறப்பு:

சுவாமிகள் நாயோடு ஒருங்கிருந்து உண்ணும் செயல் ஒருவகையிற் **பத்திரகிரியாரையும்**, பேய்க்கரும்பு தித்திக்கப் பெற்ற செயல் **பட்டினத்தாரையும்** நமக்கு நினைவூட்டி நிற்கின்றன. சுவாமிகள் மௌன விரதம் பூண்டு பேசாமல் இருந்தே இவ்வளவு பெருந் திருப்பணியை மிக விரைவில் செய்து முடித்திருப்பது,

"பேசாமை பெற்றதனிற் பேசாமை கண்டனரைப்
பேசாமை செய்யும் பெரும்பெருமான் —
பேசாதே
எண்ணென்றும் வண்ணம் இருக்கின்ற யோகி
கள்பால்
உள்நின்றும் போகான் உளன்"

எனவரும் **திருக்களிற்றுப்படியார்** செய்யுள் போன்ற பல அருள் மொழிகளை, நம்மனோர் நினைவிற்குக் கொணர்கின்றது. இத்தகைய சுவாமிகளை நாம் கண்டு மகிழும்போது, **நீத்தார் பெருமை** எனத் திருவள்ளுவர் குறிப்பிட்டிருப்பதனை, இந்நாளிலும் நாம் ஓரளவு உணர்ந்துகொண்டு மகிழ்ந்தின்புறுகின்றோம்.

"பாலருடன் உன்மத்தர் பசாசர்குணம் மருவிப்
பாடலினே டாடலிவை பயின்றிடினும் பயில்வர்"

என்பன முதலாகச் சிவஞான **சித்தியார்** கூறும் சிவஞானியர் இயல்புகள் (சுபக்கம்



தீர்த்தக் கரையிற் பேய்க்கரும்பு

284, 285) ஒரு சில, சுவாமிகளிடத்தில் காணப்படுகின்றன.

"உருவுகண் டெள்ளாமை வேண்டும்
உருள் பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து"

என்னும் திருக்குறளின் கருத்தைச் சுவாமிகளின் நிலை, நமக்கு நினைவுறுத்துகின்றது.

**தவ ஆற்றல்**

அருளாளர்களின் (Saints and Mystics) தவ ஆற்றலினை, நம்மனோர் அளவிட்டுரைத்தல் இயலுமோ? பண்டைச் சங்கத் தமிழ் இலக்கியங்களிலும் தவ ஆற்றலின் பெருமை சிறந்தெடுத்துப் பேசப் பெற்றுள்ளது!

"கான யானை தந்த விறகிற்
கடுந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்து வோனே"

—புறநானூறு, 251.

"மந்தி சீக்கும் மாதுஞ்சும் முன்றில்
செந்தீப் பேணிய முனிவர் வெண்கோட்டுக்
களிறுதரு விறகின் வேட்கும்
ஒளிறிலங்கும் அருவிய மலைகிழ வோனே"

—பெரும்பாணாற்றுப்படை, 497-500

"கவிர்ததை சிலம்பில் துஞ்சும் கவரி
பரந்திலங்கு அருவியோடு நரந்தம் கனவும்.
ஆரியர் துவன்றிய பேரிசை இமயம்"

—பதிற்றுப்பத்து, 11.

எனச் சங்கநூல்கள் ஆங்காங்குக் குறிப்பிடுதலும், அப் பகுதிகளுக்கு உரையாசிரியர்கள்,

"கான யானை தந்த விறகு என்றது, இவன் தவமிகுதியான் அதுவும் ஏவல் செய்தல்."

"மந்தி சீத்தலும், மாத்துஞ்சலும், களிறு விறகு தருதலும், இருடிகள் ஆணையால் நிகழ்ந்தன என்க."

"அருவியொடு நரந்தம் கனவும் என்றது, அம் முனிவர் ஆணையானே பிற விலங்கானும் மக்களானும் வருத்தம் இன்றிப் பகற் காலத்துத் தான் நுகர்ந்த அருவியையும் நரந்தம் புல்லையுமே கனவினும் காணும் என்றவாறு."

என விளக்கம் எழுதியிருத்தலும், நாம் சிந்தித்து உணரத் தகுந்த செய்தியாகும். இவ்வாற்றால் சங்க இலக்கியங்கள் தாமும், முனிவரர்களின் தவ வலிமையினைப் புகழ்ந்து போற்றி யுரைத்திருத்தல் காணலாம்.

**முடிவுரை :**

நம்மனோர் கண்காணும்படி திருநீறும் வில்வதளமும் அளித்தே, அன்பர்களுக்கு வேண்டும் பல நலங்களை விளைவித்து, அவ்வாற்றால் அவர்கள் நல்கும் அன்புக் காணிக்கையினைக் கொண்டு, திருப்பணி செய்தருளிய **ஸ்ரீ சிவானந்த மௌன சுவாமிகள்** அவர்களின் சிறந்த தவமும், அவரைப் பணிகொண்டருளிய திருவல்லநாதர் பெருமானின் திருவருளும் நீடினிது ஓங்கி, உலகை உய்யக் கொண்டருள்வனவாக!



அன்பர்களின் நடுவிற் சுவாமிகள்

# வானமாமலை

[டாக்டர் திரு. மா. இராசமாணிக்கனார், M.A., M.O.L., Ph. D. அவர்கள்]

## நெடுஞ்சடையன் பராந்தகன்

மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி என்னும் மாவட்டங்கள் நான்கும் சேர்ந்த நிலப்பரப்பே பழைய பாண்டிய நாடு. கி. பி. எட்டாம் நூற்றாண்டில் இந்நாட்டை யாண்ட பாண்டியருள் **நெடுஞ்சடையன் பராந்தகன்** என்பவன் ஒருவன். அவன் கி. பி. 765 முதல் 790 வரையில் ஆட்சி புரிந்தவன்.[1]

அவன் காலத்தில் பாண்டிய நாட்டிற்கு வடக்கே காஞ்சியைத் தலைநகராய்க் கொண்டு தொண்டை நாட்டையும் சோழ நாட்டையும் ஆண்டு வந்தவன் **இரண்டாம் நந்திவர்மன்** என்னும் பல்லவ மன்னன் ஆவன். பாண்டியன் அப்பல்லவனைக் காவிரியின் தென் கரையிலுள்ள பெண்ணாகடத்தில் நிகழ்ந்த போரில் முறியடித்தான். பொதிகைமலை நாட்டை ஆண்டுவந்த ஆய் வேளைப் போரில் வென்றான்; தன்னோடு மாறுபட்ட குறும்பர் என்னும் சிற்றரசரையும் போரில் வென்றான். மேலும் இவ் வேந்தன் கொங்கர் கோமானைக் களிற்றொடு பிடித்துக் கொணர்ந்து மதுரை மாநகரில் சிறையில் வைத்தான்; அவனுக்கு உரிய கொங்கு நாட்டைத் தன் அடிப்படுத்தினான்; சேரநாட்டுக் கடற்கரை ஊராகிய விழிஞத்தை அழித்து வேணாட்டு அரசனை வென்று அவனுடைய யானைகளையும் குதிரைகளையும் செல்வத்தையும் கவர்ந்தான்.

இப்பாண்டியன் தான் வென்ற தென் பகுதியைப் பாதுகாத்தற் பொருட்டும், அவற்றில் இருந்த குறுநில மன்னரைக் கண்காணித்தற் பொருட்டும் கரவந்தபுரம் (களக்குடி) என்ற நகரில் ஆழமான அகழியும் உயர்ந்த மதிலுமுடையதொரு கோட்டையை அமைத்தான்; அதனில் பெரிய நிலைப்படை யொன்றை வைத்தான். அந்நகரம், 'களக்குடி நாட்டுக் களக்குடியான கரவந்தபுரம்' என்று கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது. அக் கோட்டையே திருநெல்வேலி வட்டத்தில் 'உக்கிரன் கோட்டை' என்பது. அஃது அழிந்த நிலையில் உள்ளது.

## பாண்டியன் அமைச்சர்

இப் பாண்டியனுடைய அமைச்சர் மாறன் காரி என்பவனும், அவன் தம்பி மாறன் எயினன் என்பவனும் ஆவர். மாறன் காரி கரவந்தபுரத்தில் மாறன் என்பவனுக்குப் பிறந்தவன்; காரி என்ற இயற்பெயரும் மதுரகவி என்னும் சிறப்புப் பெயரும் உடையவன். இவன் மதுரைக்கு வடகிழக்கே ஆறு கல் தொலைவிலுள்ள யானைமலை அடிவாரத்தில் திருமாலுக்கு ஓர் கற்றளி அமைத்தான்; அதனில் நரசிங்கப் பெருமானைக் கி. பி. 770-ஆம் ஆண்டில் எழுந்தருளுவித்தான்; அக் கோவிலுக்கு அண்மையில் வேதியர்க்கு விடுதிகளும் அமைத்தான்.

இவன் இறந்த பின்பு இவன் தம்பியான மாறன் எயினன் யானைமலை நரசிங்கப் பெருமாள் கோவிலுக்கு முகமண்டபம் அமைத்தான்; கடவுள் மங்கலம் செய்தான்.[2]

## பாண்டியனும் வைணவன்

நெடுஞ்சடையன் பராந்தகனுடைய அமைச்சர்கள் வைணவரா யிருந்தாற் போலவே மன்னனும் வைணவப்பற்று மிக்கவனாய் விளங்கினான். பாண்டியர் வழிவழிச் சைவர். அங்ஙனமிருந்தும்

[1] T. V. S. பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு, பக்கம் 13.

[2] Epigraphia Indica, Vol. 8, pp. 319-320.

இவன் வைணவ சமயப்பற்று மிக்குடைய வனுய் இருந்தான். இவன் கொங்கு நாட்டை வென்ற பிறகு கோயம்புத்தூரை அடுத்த பேரூர்க்குச் சென்றுன்; அங்குத் திருமாலுக்குக் குன்ற மன்னதோர் கோயில் எடுப்பித்தான். இவன் தென்னவானவன், சீவரன், சீமனேகரன் எனப்பல விருதுப் பெயர்களைப் பெற்றவன். இவனைப் பற்றிய விவரங்களைக் கூறுவன இரண்டு செப்பேடுகளாகும். ஒன்று வேள்விக்குடிச் செப்பேடுகள்; மற்றவை சீவரமங்கலச் செப்பேடுகள். இம்மன்னனே இவை இரண்டையும் வெளிப்படுத்தியவன்.

### வேள்விக்குடிச் செப்பேடுகள்

கி. பி. முதல் அல்லது இரண்டாம் நூற்றுண்டில் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் பாண்டிய மன்னன் பாகனூர்க் கூற்றத்தைச் சேர்ந்த கொற்கை கிழான் நற்கொற்றன் என்பவனுக்கு வேள்விக்குடி என்னும் ஊரைத் தானமாக அளித்தான். சங்க காலத்துக்குப் பின்பு தமிழகத்தில் களப்பிரர் ஆட்சி ஏற்பட்டது. அவர்கள் சில நூற்றுண்டுகள் தமிழகத்தை ஆண்டனர். பாண்டிய நாட்டையாண்ட அக் களப்பிரர், பாண்டியர் அந்தணர்க்குத் தானமாக விட்ட ஊர்களைக் கைக் கொண்டனர்.

ஏறத்தாழக் கி. பி. 575-இல் கடுங்கோன் என்ற பாண்டியன் களப்பிரரை விரட்டி நாட்டையாளத் தொடங்கினுன். அவனுக்குப் பின்பு பாண்டியர் தொடர்ந்து நாட்டை ஆளலாயினர். அவர்கள் பட்டியலைக் கீழே காண்க :

| | மன்னர்கள் | காலம் |
|---|---|---|
| 1. | கடுங்கோன் | கி.பி. 575—600 |
| 2. | மாறவர்மன் அவனி சூளாமணி | கி.பி. 600—625 |
| 3. | செழியன் சேந்தன் | கி.பி. 625—640 |
| 4. | மாறவர்மன் அரிகேசரி | கி.பி. 640—670 |
| 5. | கோச்சடையன் ரணதீரன் | கி.பி. 670—710 |
| 6. | அரிகேசரி பராங்குச மாறவர்மன் | கி.பி. 710 –765 |
| 7. | நெடுஞ்சடையன் பராந்தகன் | கி.பி. 765—790[3] |

நெடுஞ்சடையன் பராந்தகனது ஆட்சிக்கு முன்பு பாண்டியர் அறுவர் ஆண்டிருந்த காலத்தில் களப்பிரர்க்குப் பின்பு வேள்விக் குடியைப் பிரமதேயமாகப் பெற்ற கொற்கை கிழான் நற்கொற்றவன் வழியில் தோன்றியவர்கள், அப் பிரமதேயத்தை மீண்டும் கேட்டுப் பெறவேண்டும் என்று நினைக்கவில்லை. நெடுஞ்சடையன் ஆட்சியில் கொற்கை கிழான் வழித் தோன்றலான நற்சிங்கன் என்பவன் மன்னனைக் கண்டு தன் உரிமையை எடுத்துரைத்தான். மன்னன் அவன் கூறியதைத் தக்கவாறு ஆராய்ந்து, வேள்விக்குடியை அவனுக்குப் பிரமதேயமாக வழங்கினுன். வேள்விக்குடிச் செப்பேடுகள் இச்செயலை உணர்த்தவே எழுந்தன.[4] அவை பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி காலமுதல் நெடுஞ்சடையன் காலம் வரையில் இருந்த பாண்டியர் சிறப்புக்களையும், களப்பிரர் இடையீட்டையும், நெடுஞ்சடையன் வீரச் செயல்களையும் எடுத்துரைக்கின்றன. இச் செப்பேடுகளின் இறுதியில் நான்கு வடமொழிச் செய்யுட்கள் அமைந்துள்ளன. அவை 'வைணவ தர்மம்' என்னும் வடமொழி நூலில் இருப்பவை.

### சீவரமங்கலச் செப்பேடுகள்

சங்ககாலத்திலேயே வேதியர் தமிழ் நாட்டில் குடியேறித் தமிழ் மன்னரிடம் நிலங்களையும் ஊர்களையும் மானியமாகப் பெற்றனர் என்பதற்கு வேள்விக்குடிச் செப்பேடுகளே ஏற்ற சான்ருகும். தமிழரசர் இங்ஙனம் வேதியர்க்கு ஊர்களை வழங்குதல் என்னும் செயல் பின் நூற்றுண்டுகளிலும் தொடர்ந்து நடைபெற்றுவந்தது. நெடுஞ்சடையன் பராந்தகன் காலத்தில் மகதப் பிராமணனுகிய ஸுஜ்ஜடபட்டன் என்பவன் வேதங்களில் வல்லவனுயிருந்தான். பாண்டியன் அவனுக்கு ஓர் ஊரைத் தானமாக வழங்கினுன். அவ்வூர் வேலங்குடி என்பது. பாண்டியன் தன் விருதுப் பெயர்களுள் ஒன்ருகிய 'சீவரன்' என்னும் பெயரால் அதற்குச் சீவரன் மங்கலம் (ஸ்ரீவரன் மங்கலம்) என்னும் புதுப் பெயரிட்டுத் தானமளித்தான். இத்தானத்தைக்

---

[3] ஷை பக்கம் 37-48

[4] Epigraphia Indica, Volume XVII, No. 16.

குறிக்க எழுந்தவையே **சீவரமங்கலச் செப்பேடுகள்.**[5]

பராந்தகனது 17-ஆம் ஆட்சி யாண்டில் (கி. பி. 782-இல்), அதுவரையில் வேலங்குடி என்று பெயர் பெற்றிருந்த ஊர் ஒரே நாளில் '**சீவரன்மங்கலம்**' எனப் புதுப் பெயர் பெற்றது. ஸ்ரீவர மங்கலம் என்பது முதலில் சிரீவரமங்கலம் எனவும், பின்பு சீவரமங்கலம் எனவும் வழக்குப் பெற்றது. இச் சிரீவர மங்கலத்தில் **நம்மாழ்வார்** காலத்தில் பெருமாள் கோவில் இருந்தது. நம்மாழ்வார் 11 பாடல்களில் சீவரமங்கலப் பெருமாளைப் பாடியுள்ளார்; "சீவரமங்கலம் செந்நெல் வயல்களுக்கிடையே தாமரை மலர்களை உடையது, சந்திர மண்டலத்தை யளாவிய மாட மாளிகை உடையது, நான்கு மறைகளிலும் வல்லவர் பலர் வாழிடமாய் அமைந்தது, வேத வேள்விகள் அறுதது, தேன் துளிக்கும் குளிர்ந்த சோலைகளை உடையது, கரும்பும் செந்நெல்லும் விளைதலை உடையது," என்று உள்ளம் களிகூரப் பாடியுள்ளார்; அங்குக் கோவில் கொண்டு எழுந்தருளியுள்ள பெருமானை, "**வானமாமலையே,** அடியேன் தொழ வந்தருளே" என்று விளித்து வேண்டியுள்ளார்.

இதனால் நம்மாழ்வார் காலத்து ஊரின் பெயர் சிரீவர **மங்கலம்** என்பதும், அவ்வூர்ப் பெருமாளின் பெயர் **வானமாமலை** என்பதும் வெளியாகின்றன. 'வானமாமலை' என்பது 'வானத்தை அளாவிய பெரியமலை போன்ற கோவில்' எனப் பொருள் படலாம்; அக்கோயிற் பெயர் காலப் போக்கில் அக் கோவிலில் உள்ள பெருமாளுக்கு வழங்கி யிருக்கலாம்; பின்னர் அஃது ஊருக்குப் பெயராய் அமைந்து விட்டது போலும்!

நம்மாழ்வார் இத்தலத்தை வேலங்குடி என்று பாடாமல் சிரீவர மங்கலம் என்றே பாடுவதால், அவர் இப் புதுப் பெயர் உண்டானதற்குப் பின்பு (கி. பி. 782-க்குப் பின்பு) வாழ்ந்தவரெனக் கொள்வதே பொருத்த முடையது.

[5] Indian Antiquary, Volume XXII, pp. 69-75.

## நடைபெறுகின்ற நிகழ்ச்சிகள்

**சென்னை:**—ஏகாம்பரேசுவரர் கோயிலில் பிரம்மோற்சவம்.

**விரிஞ்சிபுரம்:**—ஸ்ரீ மார்க்கபந்து சுவாமி தேவஸ்தானத்தில் பிரம்மோற்சவம்.

**திருக்கோவலூர்:**—ஸ்ரீ திருவிக்கிரம சுவாமி கோயிலில் பிரம்மோற்சவம்.

**செட்டிகுளம்:**—பாலதண்டாயுத சுவாமி கோயிலில் பங்குனி உத்திர உற்சவம்.

**காஞ்சிபுரம்:**—ஏகாம்பரநாத சுவாமி கோயிலில் பங்குனி உத்திரத் திருக்கல்யாண பிரம்மோற்சவம்.

**மணவாளநல்லூர்:**—ஸ்ரீ கொளஞ்சியப்பர் கோயிலில் பங்குனிப் பெருவிழா.

**வடுவூர்:**—ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலில் பிரம்மோற்சவம்.

**லால்குடி:**—ஸ்ரீ சப்தரிஷீஸ்வர சுவாமி கோயிலில் பிரம்மோற்சவம்.

**சுவாமிமலை:**—ஸ்ரீ சுவாமிநாத சுவாமி தேவஸ்தானத்தில் பங்குனி உத்திரம் தீர்த்தவாரி, ஸ்ரீ வள்ளிநாயகியார் திருக்கல்யாண மகோற்சவம்.

**திருவாலங்காடு:**— ஸ்ரீ வடாரணியேசுவர சுவாமி கோயிற் பங்குனிமாத பிரம்மோற்சவம்.

**புள்ளம் பூதங்குடி:**—ஸ்ரீ வல்வில் இராமசுவாமி தேவஸ்தானம் பிரம்மோற்சவம்.

**திருமயிலாடி:**—ஸ்ரீ மாதவப்பெருமாள் கோயிலில் ஸ்ரீராமநவமி உற்சவம்.

**மூவலூர்:**—ஸ்ரீ மார்க்கசகாய சுவாமி கோயிலில் ருத்ரபாத மகோற்சவம்.

**திருக்கண்டியூர்:**—ஸ்ரீ ஹரசாப விமோசனப் பெருமாள் கோயிலில் பிரம்மோற்சவம்.

**சென்னைத் திருமயிலாப்பூர்:**—கபாலீசுவரர் கோயிற் பெருவிழா.

**கரூர்:**—ஸ்ரீ கல்யாண பசுபதீசுவரர் கோயிற் பெருவிழா.

**பேரூர்:**—பட்டீச்சுர சுவாமி கோயிற் பெருவிழா.

# சமயநிலையப்பணி

(கோவை திரு. சி. எம். இராமச்சந்திரன் செட்டியார், B.A., B.L., அவர்கள்)

ஒரு வெள்ளிக்கிழமை. ஊருக்கு ஐந்து கல் தொலைவில் இருக்கும் ஒரு சமயநிலையத்தில் ஒரு திருக்கூட்டத்திற்கு அழைப்பு வந்தது. அக்கூட்டத்தில் பேசும்படி கேட்டிருந்தார்கள். சென்றேன். செழிப்பான நாட்டுப்புறக் காட்சி எங்கும் தென்பட்டது. பாதையின் இருபுறமும் சோளம், இராகி, பருத்தி விளைந்திருந்த தோட்டங்கள் படர்ந்திருந்தன. இந்தப் புன்செய் நிலங்களின் இடையில் செழிப்பான தென்னை, மா, பலா நிறைந்த ஒரு சோலை தோன்றிற்று. சகாரா பாலை வனங்களுக்கு நடுநடுவே பேரீச்சச் சோலையும், தூய்மையான நன்னீரூற்றும் இருப்பதைப் போலக் காட்சி அளித்தது. சோலையின் இடையில் அருமையான பெரிய மண்டபமும் அதன் மேலே உயரிய விமானமும் இருந்தன. அவைகளை ஒட்டி நல்ல நறுமணம் வீசும் நந்தவனமும் இருந்தது. மண்டபத்திற்கு உள்ளே சென்றதும் ஐந்து தூண்களும் ஆறு துறைகளும் கொண்ட விதானத்தின் அடியில் மிக அழகு பொருந்திய தெய்வீக ஓவியங்களும் படிவங்களும் அழகுபெற வைத்திருந்தன. ஆறு துறைகள் அமைந்திருந்ததைக் கண்டதும் அது கௌமார சமயத்திற்குச் சார்ந்த சமயநிலையம் என ஊகிக்க நேர்ந்தது. மண்டபத்தின் மேற்புறத்தில் நிலைய அதிபதியின் ஒடுக்கம் அமைந்திருந்தது. ஒடுக்கத்தின் மேலே அரிய சிலை ஒன்று வைக்கப்பட்டிருந்தது. அது கிழக்கு நோக்கி இருந்தது. அதற்கு எதிரே ஒரு பாதை கால்கல் தொலைவு சென்றது. இருபுறமும் தென்னை முதலிய மரங்கள் அழகு செய்தன. அப்பாதையின் கோட்டில் ஒரு முருகபிரான் திருக்கோயில் இருந்தது. அதுவும் அமைதியான இடத்தில் பொலிந்து கொண்டிருந்தது. இந்த நிலயத்தைக் காண்பதே பெருமகிழ்ச்சி தரும். நல்ல நிலையில் திகழ்ந்துவரும் சமய நிலையங்களில் இதுவும் ஒன்று என்ற நினைவு எவருக்கும் தோன்றும்.

பிற்பகல் ஒருமணி வரையில் ஆராதனை நடந்தது. அடியார்கள் கூட்டம் மண்டபம் நிறைய இருந்தது. ஆராதனை முடிந்ததும் அன்பர்களுக்குத் திருநீறு வழங்கப்பட்டது. அன்று குருபூசையாக இருந்ததினால் வந்த அடியார்களுக்கு மாகேசுர பூசையும் நடந்தது. அதற்குப் பிறகு அடியார்கள் மண்டபத்தில் கூடினார்கள். முருகபிரானைப் பற்றித் திருக்கூட்டத்தில் சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. என்னை அழைத்திருந்தபடி அக்கூட்டத்தில் என்னுடைய சொற்பொழிவும் நிகழ்ந்தது. வந்திருந்த பொதுமக்களும் வெகு அமைதியாக அரிய சொற்களைக்கேட்டு மகிழ்ந்தார்கள். பிறகு அவரவர்கள் ஊர்களுக்குத் திரும்பிச் சென்றார்கள். பெரும்பான்மையோர் சுற்றியிருக்கும் வட்டாரங்களில் ஐந்து ஆறு கற்களில் குடியிருப்பவர்கள். இந்தச் சமய நிலயத்தில் மிகுந்த ஆர்வம் கொண்டிருப்பவர்கள். அதனால் தங்கள் வாழ்க்கைகளைத் திருத்தி நன்னெறியில் ஈடுபட்டு வந்திருக்கிறார்கள்.

இந்தச் சமயநிலையத்தைத் தோற்றுவித்தவர் கொங்கு வேளாளர்குடியில் தோன்றிப் பள்ளிப் படிப்பின்றி இயற்கை யறிவில் சிறந்து, நெல்லைத் திருப்புகழ்ச் சுவாமிகளிடம் மாணவர் ஆகி அரியசெய்யுள் இயற்றும் ஆற்றல்பெற்றுத் தன் சொந்த முயற்சியில் சேர்த்திய சொத்தில் மண்டபாதிகளைக் கட்டிச் சீடர்களைப் பயிற்றுவித்துக் கௌமார சமயத்தைப் பரப்பின பெரியார். தூய வாழ்க்கைத் துறவியாக ஏறக்குறைய ஒரு நூறு ஆண்டுகள் வரையிற் சமயப்பணியில் ஈடுபட்டு தாமும் தம் மாணவர்களுமாக நூறாயிரக் கணக்கான செய்யுள்கள் கொண்ட சமய நூல்களை வெளியிட்டுக் கொங்குநாட்டில் ஆறைநாட்டுப் பகுதியில் தூய்மை உணவும் நன்மார்க்கமும் புகுத்திக் காட்டு மக்களாகஇருந்த பொதுமக்களை வீட்டுக்குரிய

மக்கள் ஆக்கி நரகலோகத்தைச் சிவலோக மாக்கிய புனிதப் பெருமகனுர். தற்போது அன்னருடைய மாணவர்கள் அதே நன்னெறி யைக் கடைப்பிடித்துச் சைவச்சேவை செய்து வருகிருர்கள். ஒரு தனி மகன் என்ன பணி செய்யக்கூடும் என்று இந்த நிலையத்திற்குச் சென்ருல் அறிய முடியும்.

மேலும் இந்தத் திருநிலையம் தோன்றின பிறகு இதற்கு அருகில் உள்ள பல கிராமங் களிலும் மக்களிடையே உண்மையில் சைவம் தழைத்து வருகின்றது. இதன் மாணுக்கர்கள் சமூக சேவையிலும் கல்விச் சேவையிலும் ஈடுபட்டு வருகிருர்கள். தொடக்கப்பள்ளி களும் உயர்நிலைப் பள்ளிகளும் வைத்துப் பௌதிகப் படிப்பேயன்றிச் சமயப் படிப்பும் பரப்பி வருகின்ருர்கள். நூற்றுக்கணக்கான இளம்பிள்ளைகள் சமயப் படிப்பில் சிறந்து விளங்குகிருர்கள். அப்பணியில் மனமொத்து நாட்டுக் குடியானவர்கள் உதவி புரிந்து வரு கிருர்கள். சுற்றுப் பக்கங்களிலும் உயர் நிலைப் பள்ளிகள் தோன்றுவதற்கு இந்த நிலையத் துறவிகளே காரண பூதர்களாக இருக்கின்ருர்கள். சில ஊர்களில் கிளை நிலையங்கள் ஏற்பட்டுச் சைவத்தொண்டு புரிந்து வருகிருர்கள். ஒரு தனித் துறவியால் இத்தனை சேவையும் செய்யமுடியும் என்ப தற்கு இந்த நிலையமே அத்தாட்சியாக இருக் கிறது என்பதை அப்போது உணர்ந்தேன். 'இப்படிப்பட்ட நல்ல நிலையங்கள் நமது நாட் டில் மிகப் பெருகுக,' என்று இறைவனை வணங்கினேன்.

குடியானவர்கள் குலத்தில் தோன்றிய ஒருவர் தக்க ஆசானிடம் சமயக்கல்வியும் ஒழுக்கமும் பெற்று, தான் சம்பாதித்த சொத் திலேயே சமய நிலையம் தோற்றி வைத்து அதனைப் பெருக்கி மாணவர்களுக்குச் சமயச் செய்யுள் நூல்கள் எழுதும்படி போதித்து, சைவசமயத்தின் தத்துவங்களையும் ஒழுக்கங் களையும் அக்கம்பக்கத்து வட்டாரங்களில் பொதுமக்களிடை ஏற்கச்செய்து, பொதுக் கல்வியும் சமயக் கல்வியும் போதிக்க நிலையங் களையும் தோற்றுவித்து நூறு வயதுவரை யில் வாழ்ந்து, தனக்குப் பிறகு மாணுக்கர்கள் ஒழுங்குபெற அதனை நடக்கும்படி ஊக் கத்தை அளித்துச் சென்றிருக்கின்ருர் என் ருல், இராமகிருஷ்ண நிலயத்தைப் போலவும் வெளிநாட்டுக்கிறிஸ்தவப்பாதிரிகளைப் போல வும் நம்நாட்டு குடிமக்களும் செய்யமுடியும் என்று இந்த நிலையம் நிரூபித்ருக்கக் கண்டு மிகவும்மகிழ்ச்சியுற்று ஊர் திரும்பினேன்.

இத்தகைய சிறந்த சமய நிலையங்கள் மிகப் பல ஏற்பட இறைவன் அருள் புரிவா ருக.

---

**கல்லக்குறிச்சி** :—கலியுகவரதராஜப்பெருமாள் கோயிலில் பிரம்மோற்சவம் 2—4—63 முதல் 11—4—63 வரை நடைபெறும்.

**பண்பொழி** :—திருமலைக்குமாரசுவாமி கோயிலில் 4—1—63-ல் திருப்பாவை திருவெம்பாவை மாநாடு நடைபெற்றது.

**மிமிசல்** :—கல்யாணராமசுவாமி கோயிலில் 6—1—63-ல் திருப்பாவை திருவெம்பாவை மாநாடு நடைபெற்றது.

**திண்டுக்கல்** :—காளத்திசுவரர் கோயிலில், திண்டுக்கல் வட்டத்திலுள்ள கோயில்களின் சார்பில் திருப்பாவை திருவெம்பாவை மாநாடு நடைபெற்றது. மாநாட்டில் சென்னை அறநிலைய ஆட்சித்துறை ஆணையர், மதுரைத் துணை ஆணையர் முதலியவர்கள் கலந்து கொண்டனர்.

**உத்தமபாளையம்** :—திருக்காளத்தி ஈசுவரர் கோயிலில் 8—1—63ல் திரு. தமிழுவேள் பி. டி. இராசன் அவர்கள் தலைமையில் பாவை மாநாடு நடைபெற்றது.

**திண்டிவனம்** :—இலட்சுமிநரசிம்மசுவாமி கோயிலில் 10—1—63ல் சென்னை அறநிலைய ஆட்சித்துறைத் துணை ஆணையர் திரு. டி. இராமலிங்க ரெட்டியார், எம்.ஏ., பி.எல்., அவர்கள் தலைமையில் பாவை மாநாடு நடைபெற்றது. விழாவில் தென்ஞற்காடு மாவட்ட அறநிலைய ஆட்சித்துறை உதவி ஆணையர் திரு. பி. சுந்தரமூர்த்தி, பி.ஏ., அவர்களும் கலந்துகொண்டார்கள். உதவி ஆணையர் அவர்கள் ஆலயத்தின் இராஜ கோபுரத்தின் உச்சியில் பக்தர்களின் முயற்சியால் புதிதாக அமைக்கப் பெற்ற பேரொளி மின்விளக்கை 10—1—63ல் ஏற்றிவைத்தார்கள்.

# மலைநாட்டுத் திருப்பதி யநுபவம்

[மகாவித்துவான் திரு. P. B. அண்ணங்கராசார்ய சுவாமிகள், காஞ்சிபுரம்]

மலைநாட்டுத் திருப்பதிகளுள் திலகமான திருவனந்தபுரத்தை யனுபவித்து வருகையில் நம்மாழ்வாருடைய பதிகத்தில் ஏழு பாசுரங்களையனுபவித்தாயிற்று கீழ்; இனி எட்டாவது பாசுரந் தொடங்கி யனுபவிப்போம்.

8. கடுவினை களையலாகுங்
 காமனைப் பயந்தகாளை
இடவகை கொண்டதென்பர்
 எழிலணி யனந்தபுரம்
படமுடை யரவிற்பள்ளி
 பயின்றவன் பாதங்காண
நடமினோ நமர்களுள்ளீர்!
 நாமுமக் கறியச் சொன்னோம்.

திருவனந்தபுரத்தில் திருக்கண் வளர்ந்தருளா நின்ற பெருமானுடைய திருவடிகளைக் காண நடவுங்கோளென்று ஸ்ரீவைஷ்ணவர்களை நோக்கி நியமித்தருளுகிறாராழ்வார். கீழ் ஆறும்பாட்டில் "நமர்களோ! சொல்லக்கேண்மின்" என்றது போல இங்கும் "நடமினோ நமர்களுள்ளீர்!" என்றது குறிக்கொள்ளத்தக்கது. "ஆழ்வாருடைய ஸம்பந்தம் நமக்கு வேணுமென்றிருக்குமவர்கள் திருவனந்தபுரத்தைச் சென்று ஸேவித்தே வரவேணு"மென்று கட்டளையிடுகிறாரென்று நன்கு விளங்கா நின்றது இதனால். இதற்குச் சேர ஒரு ஐதிஹ்யம் சம்பிரதாயத்தில் அநுசந்திக்கப்பட்டுவருகின்றது. அதாவது, ஆளவந்தாரென்னு மாசிரியர் ஸ்ரீராமாநுஜர்க்கும் பேராசிரியர் என்பது உலகமறிந்தது. யமுனைத் துறைவர் என்னுந் திருநாமமும் அவ்வாசிரியருடையதே. மணக்கால் நம்பியென்னும் பெரியாரிடத்தில் இவ்வாளவந்தார் வேதாந்த விழுப்பொருள்களெல்லாம் கற்றுணர்ந்தவர். ஆனால் யோகரஹஸ்யம் என்கிற ஒரு பொருள்மட்டும் தமக்குக் கிடைத்திலதாகவும், அது குருகை காவலப்பனென்னும் பெரியார் பக்கலிலேயே பெறத்தக்கதாகவும் சொல்லிவிட்டார் மணக்கால் நம்பி. அதனால் ஒரு சமயம் ஆளவந்தார் குருகை காவலப்பனிடம் சென்று தொழுது 'அடியேனுக்கு யோகரஹஸ்யம் உபதேசித்தருளவேணும்' என்று வேண்ட, அதற்கு அவர் அடுத்த தை மாதத்தில் ஒரு நாள் இட்டுக்கொடுத்து, அன்று தமக்கு ஆசாரியன் திருவடி சாரும் நாளாயிருக்குமென்று தெரிவித்து, அதற்கு முன்னடி வந்து உபதேசம் பெற்றுப் போகும்படி சொல்லிப்போக விட்டார்.

இப்படி யிருக்கையில், மார்கழித் திங்களில் திருவரங்கம் பெரிய கோயிலில் நடைபெறும் பகற் பத்து இராப் பத்து என்னும் திருவத்யயனத் திருவிழாவைச் சேவிக்க ஆளவந்தார் எழுந்தருளினார். இராப்பத்தின் முடிவுநாளில் அரையர் திருவாய்மொழி பாடுங் கோஷ்டியில் (ஆளவந்தார்) வீற்றிருந்தார். அன்று திருவாய்மொழி பத்தாம் பத்து இசை பாடுகிறார் அரையர். அதில் இத்திருவனந்தபுரப் பதிகம் பாடுகையில் இப்பாட்டைச் சொல்லுகையில் "எழிலணி யனந்தபுரம் படமுடையரவிற் பள்ளி பயின்றவன் பாதங்காண, நடமினோ நமர்களுள்ளீர் நாமுமக்கறியச் சொன்னோம்" என்பதை, அரையர் ஆளவந்தார் திருமுகத்தை நோக்கி ஊன்றியுறைத்துப் பாட, ஆளவந்தாரும் இதைக் கேட்டு 'ஆழ்வாருடைய தமர்களிலே நாம் அந்வயிக்கவேண்டில் திருவனந்தபுரஞ்சென்று ஸேவித்துவர வேண்டியது இன்றியமையாததாகும்' என்று சொல்லிக் கொண்டே நம்பெருமாளிடம் விடைபெற்றுப் பயணமாகித் திருவனந்தபுரத்திற் கெழுந்தருளி அனந்தபத்மநாபனை மங்களாசாஸனம் செய்துகொண்டே வாழ்ந்திருக்கையில், ஏற்கெனவே குருகை காவலப்பனிடம் யோகரஹஸ்ய உபதேசம் பெறுவதற்கு இட்டிருந்த நாள் தவணை நினைவுக்கு வந்து பார்க்கையில் அதுவே நாளாக இருக்கை

யாலே அலமந்து 'ஒரு புஷ்பக விமானம் பெற்றிலோமே!' என்று சோகித்தெழுந் தருளியிருந்தார். குருகை காவலப்பன் குறித்திருந்தபடி அந்நாளிலேயே திரு நாட்டுக் கெழுந்தருளின செய்தியறிந்து ஆளவந்தார் திருவத்யயனத்திற்குச் சென்று சேர்ந்து க்ருத க்ருத்தியரானார்.

இங்குச் சுருக்கமான ஈடு முப்பத்தாரு யிரப்படி யருளிச் செயல் வருமாறு— "திருவத்யயனம் பாடாநிற்க இத்தைக் கேட்டருளி ஆளவந்தார் 'நமக்கு ஆழ்வா ரோடே ஒரு ஸம்பந்த முண்டாகவேணும்' என்று அப்போதே ஸ்ரீபாதத்தையுடை யாரைக் கூட்டிக்கொண்டு எழுந்தருளி னார்" என்று.........(8)

**9. நாமுமக் கறியச் சொன்ன**
**நாள்களும் நணியவான**
**சேம நன்குடைத்துக்கண்டீர்**
**செறிபொழி லனந்தபுரம்**
**தூமநல்விரை மலர்கள்**
**துவளறவாய்ந்து கொண்டு**
**வாமனனடிக் கென்றேத்த**
**மாய்ந்தறும் வினைகள்தானே.**

முன்பு நாம் உங்களுக்குத் தெரிவித்திருந்த வாழ்நாளிறுதி காலமும் சமீபித்து வந்திட் டது; பொழில் செறிந்த திருவனந்தபுரம் நமக்கு நன்கு சேமஞ்செய்யவல்லது; இதை அனுபவத்திற்காணலாம். ஆகவே அங்கு தூபத்தையும் நறுமலர்களையும் சேகரித் துக் கொண்டு சென்று எம்பெருமானு டைய திருவடிகளுக்கென்று சங்கற்பித் துக் கொண்டு துதிக்கப் பாவங்கள் தன்ன டையே தொலைந்துபோம் என்பது பதப் பொருள். இனி விசேடப் பொருள் கேளீர்.

ஆழ்வார் கீழே ஒன்பதாம் பத்தில் "நாளேலறியேன்" என்று எம்பெருமானைச் சென்று சேருங்காலம் தெரியவில்லையே யென்று தடுமாறினவர் பிறகு திருக் கண்ணபுரப் பதிகத்தில் "மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான்" என்னும் பாசுரத்தினால் அக்காலம் தெரிந்துவிட்ட தாகக் கூறினார். அதாவது என்னென்னில்; கருமங்களின் முடிவில் மோக்ஷமா? உடலின் முடிவில் மோக்ஷமா? என்று வேதாந்திகளின் திரளில் ஒரு விசார முண்டு; சில அதிகாரிகளுக்குக் கருமங் களின் முடிவில் மோக்ஷமென்பதாக நூற்கொள்கை. பிரபந்நர்களான உத்த மாதிகாரிகளுக்கு நிகழுமுடம்பின் முடிவில் மோக்ஷமென்று விசேடித்துக் கூறுவர். கருமங்களின் முடிவில் மோக்ஷமென்று கொண்டால் தேறுவதற்கு இடமே யிராது. கருமங்களுக்கு முடிவுகால மென்று ஒன்று காண்பது அரிதாதலால். * நாளேலறியேனென்று கவலைகொண்ட ஆழ்வாரைத் தேற்றுவிக்கக் கருதிய திருக் கண்ணபுரத் தெம்பெருமான் 'ஆழ்வீர்; வீணாகக் கவலை கொள்ளக் கடவீரல்லீர்; இவ்வுடல் தொலையுந்தனையும் சிறிது பொறுத்திரும்; இவ்வுடலோடே உமது கருமங்களையெல்லாம் முடித்திட்டு உம் மைத் திருவடி சேர்த்துக் கொள்வது திண்ணமென்று கொள்ளீர்' என்றான். அதனையே இங்கு "நாமுமக்கறியச் சொன்ன நாள்களும் நணியவான" என்ப தனால் நினைப்பூட்டுகிறாராழ்வார்.

இங்குச் சிலர் சிறு கேள்வியொன்று கேட்பர்; திருக்கண்ணபுரப் பதிகத்தில் ஆழ்வாருடைய திருவாக்கு உள்ளதே யன்றி எம்பெருமானுடைய திருவாக்கு இல்லையே; 'எம்பெருமான் எனக்கு இங்ஙனே திருவாய் மலர்ந்தருளினான்' என்பதாகவுமில்லையே என்று. இதற்கு விடைகேண்மின்; திருவாய்மொழியாயிரத் திலும் ஆழ்வார்க்கு எம்பெருமான் தெரி வித்தருளின விடங்கள் பலவுண்டு; ஆனால் அவை எம்பெருமானுடைய திருவாக்காக அமைந்திருப்பதில்லை; அவனது திருவுள் ளத்தை வெளியிடும் வகையில் ஆழ்வார் பாசுரமியற்றுவது இயல்பு. "மரண மானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்" என்று அங்குச் சொன்னது "மரணமானால் வைகுந்தங் கொடுக்கிறேனென்றுரைத்த பிரான்" என்றே பொருள்பட்டு நிற்கும். இதனை மணவாள மாமுனிகள் திருவாய் மொழி நூற்றந்தாதியில்,

**" மால் உமதுவாஞ்சை முற்றும்**
**மன்னுமுடம் பின்முடிவில்**
**சால நண்ணிச் செய்வனெனத் தானுகந்து**
**மேலவனைச் சீரார் கணபுரத்தே**
**சேருமெனுஞ் சீர்மாறன் "**

என்று விளங்கக் கூறியருளியது காண்க. ஆக "நாம் உமக்கறியச் சொன்ன நாள் களும் நணியவான" என்றதற்கு இங்குக்

கூறியபொருள் மிகப் பொருத்தமாயிற்று. இப்பாசுரத்தைக் கொண்டும் "மரண மானால் வைகுந்தங் கொடுக்கும் பிரான்" என்ற பாசுரத்தின் பொருளை அறுதி யிடலாமென்க.

இவ்வுடல் தொலையுங்காலம் அணித் தாயிற்றென்பது ஆழ்வார்க்கு எங்ஙனே தெரிந்ததென்று கேள்வி பிறக்கும். இதைப் பற்றிச் சீர்வசனபூடணத்தில் பிள்ளையுலகாசிரியர் அருளிச் செய்வது காண்மின்;—(261) "ஆறுநீர் வரவு அணித் தானால் அதுக்கீடான வடையாளங்கள் உண்டாமாபோலே ப்ராப்தி அணித்தான வாறே இந்த ஸ்வபாவவிசேஷங்கள் தன்ன டையே விளையக்கடவதாயிருக்கும்; இவற் றைக்கொண்டு சரமசரீரமென்று தனக்குத் தானே அறுதியிடலாயிருக்கும்." என்பன சீர்வசனபூடணத் திருவாக்குகள். வற்றிக் கிடக்கிற ஆற்றில் வெள்ளம் வரப்போகிற தானால் முன்னம் அதற்கு ஸூசகமான மணற்பொசிவு முதலான அடையாளங் கள் உண்டாவதுபோல, பக்தர்கட்கு எம் பெருமானுடைய ப்ராப்தி ஸமீபிக்கும் போது ஞானம் பக்தி விரக்தி முதலியவை மிகுந்து தோற்று மென்றும், அதைக் கொண்டு 'இனிமேல் நமக்கு இருள் தருமா ஞாலப் பிறவியில்லை, இதுவே நமக்குக் கடைசியான சரீரம்' என்றும் தாமே நிச்சயித்துக்கொள்ளலாயிருக்கு மென்றும் கூறியவாறு.

ஆழ்வார் தமக்குச் சரமகாலம் அணித் தாய் விட்டதாக இப்போது சொல்லுகிற இதற்குக் கருத்து யாதெனில்; "சரமஸந் தேசம்" என்று ஒன்று சொல்லுவதுண்டு; அதாவது அந்திமகாலத்தில் அன்பர் களுக்கு அருமருந்தாகச் சில சொல்லுவர் பெரியார்; பாரதப் போரில் பீஷ்மாசாரியர் தலைசாய்ந்து விட்டாரென்று தெரிந்ததும் கண்ணபிரான் தருமபுத்திரரை நோக்கி 'பீஷ்மராகிற ஞானஸூரியன் அஸ்தமித்து விட்டானாகில் ஞானவுலகில் வெளிச் செறிப்பு காணவரிது; ஓடிச்சென்று அவர் பக்கலில் தருமநுட்பங்கள் கேளும்' என்று தூண்ட, அவரும் சென்று கேட்க, அப் போது சேஷதருமம் அவதரித்ததென்பர். அவ்வகையில் சரமஸந்தேசமளிக்கக் குதூகலங்கொண்ட ஆழ்வார் தம்முடைய உபதேசத்திற்கு அவதாரிகையாக இதனைக் கூறினரென்க. 'நீங்கள் திருவனந்தபுரஞ் சென்று ஸேவிக்கவேணும்' என்பது இப் போது முக்கியமான உபதேசமாயிற்று.

"சேமநன்குடைத்துக் கண்டீர் செறி பொழிலனந்தபுரம்" என்றது—திருவனந்த புரம் மற்றைத் திருப்பதிகள் போலல்லா மல் மிகச் சிறந்த சேமம் பயக்குமது என்ற வாறு. சேமமென்பது அவரவர்களின் கருத்தாலே பலவகைப் பட்டிருக்கும். ஸம்ஸாரிகள் உடற் சேமத்தைக் கோரு வர்; முமுக்ஷுக்கள் ஆன்மாவின் சேமத் தைக் கோருவர். எல்லாவகைச் சேமத்தை யும் தந்தருளவல்லது திருவனந்தபுரம் என்றாராயிற்று. அதற்காக நாம் செய்ய வேண்டியவை கனத்திருக்குமோ வென்றும், நமக்குக் கருமங்களாகிற விரோ திகள் கனத்திருக்க, சேமம் எங்ஙனே வாய்க்குமென்றும் கேள்வி தோன்ற, பின்னடிகளிரண்டும் அதற்கு விடைகூறு வன. வழி பாட்டுக்குரிய ஸாமான்யப் பொருள்களைக் கொண்டு வழிபடவே விரோதிகள் தொலையுமென்றாரா யிற்று......(9)

**10.** மாய்ந்தறும் வினைகள்தாமே மாதவா
 வென்ன நாளும்
ஏய்ந்த பொன் மதிளனந்த புரநக
 ரெந்தைக் கென்று
சாந்தொடு விளக்கம் தூபம் தாமரை
 மலர்கள் நல்ல
ஆய்ந்து கொண்டேத்த வல்லார்
 அந்த மில் புகழினாரே.

இப்பதிகம் தொடங்கும்போது "கேசவா வென்ன — கெடுமிடராய வெல்லாம்" என்றார்; இப்போது தலைக்கட்டுமிடத்து "மாதவாவென்ன—மாய்ந்தறும் வினைகள் தானே" என்கிறார். இவற்றால் என்ன தெரிந்து கொள்ளுகிறோம்? பால் குடிக்க நோய் தீருமென்னுமாபோலே தந்தையின் திருநாமங்களைச் சொல்லச் சொல்ல நம் விரோதிகள் தொலையும் என்பது தெரிந்து கொள்ளுகிறோம்.

இப்பதிகத்தில் "இடராயவெல்லாம் கெடும்" என்றும் "எழுமையும் ஏதம் சாரா" என்றும் "தீரும் நோய் வினைக ளெல்லாம்" என்றும், "இப் பிறப்பறுக் கும் அப்பால்" என்றும் "கடுவினை களைய லாமே" என்றும் "மாய்ந்தறும் வினைகள்

தானே'' என்றும் இப்படி பெரும்பாலும் வினைகள் தீருமாற்றையே அடுத்தடுத்துச் சொல்லியிருத்தலால் அனந்தபத்மநாபப் பெருமானுக்கு இது தனிப்பட்ட ஏற்ற மென்பது தெரியலாகும். இதில் இரண்டு வகை காணத்தக்கதாகவுள்ளது. (அதாவது) "இடர் கெடும், துயர் கெடும், மாய்ந் தறும் வினைகள்'' என்றித்தகைய பாசுரங் காணுமிடத்து வினைகள் தொலையுமென் பது தெரியவருகின்றது. "எழுமையு மேதஞ் சாரா'' என்றித்தகைய பாசுரங் களைக் காணுமிடத்து வினைகள் அணுகவே மாட்டாவென்பது தெரியவருகின் றது. வினைகள் அணுகாவெனின் அவை தொலைய ப்ரஸக்தியேது? என்னுங் கேள்வி பிறக்கும்.

கேண்மின்; முன்னைய வினைகள் பின்னைய வினைகள் என்று வினைகள் இரு வகைப்படும். கடவுள் வழிபாட்டுக்கு முற்பட்டவை முன்னைய வினைகளாம்; அதற்குப் பிற்பட்டவை பின்னைய வினைகளாம். முற்பட்டவை யெல்லாம் மாண்டுபோம்; பிற்பட்டவை யொன்றும் அணுகவே மாட்டா என்று வேதாந்த நூல்கள் வகுத்துக் கூறும். ஆகவே 'கெடுமிடர் தீரும் நோய் வினைகளெல்லாம்' என்றாற்போலே சொல்லுமவை முன்னை வினைகளைப் பற்றி; 'எழுமையும் ஏதம் சாரா' என்றாற்போலே சொல்லுமவை பின்னை வினைகளைப் பற்றி என்று கொள்ளக் கடவது. பிரமஞானம் பெற்ற வற்குப் பின்னை வினைகள் நேர ப்ரஸக்தி யில்லை; ஆனாலும் பிரகிருதி யியல்பு முதலானவற்றால் நேரக் கூடுமென்று வைத்துச் சொல்லுகிறபடி.

இப்பதிகம் கற்றார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டுகின்றது மேற்பாட்டு.

மலைநாட்டுத் திருப்பதி யனுபவத்தில் திருவனந்தபுரத் திருப்பதியனுபவம், முற்றுப் பெற்றது.

மலைநாட்டுத் திருப்பதியனுபவம் முற்றிற்று.

**முடிவுரை :**

மலைநாட்டுத் திருப்பதிகள் பதின் மூன்றும் நான்கு பக்கங்களில் திகழ்கின் றன. 1, 2 திருவித்துவக்கோடும் திருநாவாயும் ஷோரனூர் பக்கம். 3 திருமூழிக் களமும், 4. திருக்காட்கரையும் ஏரணு குலம் பக்கம். 5. திருவாறன்விளை, 6. திருச்சிற்றாறு, 7. திருவண்வண்டூர், 8. திருப்புலியூர், 9. திருவல்லவாழ், 10. திருக் கடித்தானம் ஆக இவ்வாறும் திருச்செங் குன்றூர் பக்கம். 11. திருவண்பரிசாரம், 12. திருவாட்டாறு, 13. திருவனந்தபுரம் இவை மூன்றும் தென்னாட்டுக்கு அணித்தான பக்கம். நம்முடைய இவ்வனுபவம் திருவித்துவக் கோட்டில் தொடங்கித் திருவனந்தபுரத்தில்தலைக்கட்டிற்றாயிற்று. உயர்திரு. A. உத்தண்டராமப் பிள்ளை யவர்கள் கமிஷனர் பதவியில் வாழுங் காலத்து உள்கனிந்தவன்போடு நமக்கிட்ட இப்பணியை நாலைந்து வருட காலம் நிறைவேற்றி அகமகிழ்ந்தோம். இனித் தொண்டை நாட்டுத் திருப்பதிகளின் அனுபவத்தில் இறங்க அவா.

இங்ஙனம் :

காஞ்சிபுரம் பிரதிவாதிபயங்கரம்.

**அண்ணங்கராசாரியர்.**

---

**மன்னார்குடி** :—இராஜகோபாலசுவாமி கோயிலில் 16—12—62 முதல் 18—12—62 வரை 5வது பாவை மாநாடு சென்னை அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் திரு எம். எஸ். சாரங்கபாணி முதலியார், பி.ஏ., பி.எல்., அவர்கள் தலைமையில் நடைபெற்றது. சமயச் சொற்பொழிவுகளும் இன்னிசையரங்குகளும் நிகழ்வுற்றன.

**வத்தலக்குண்டு** :—விசாலாட்சி விஸ்வேசுவரர் கோயிலில் 13—1—63ல் பாவை மாநாடு நடைபெற்றது.

**சென்னை, நூலை** :—சென்னைச் சிதம்பரேசுவரர் கோயிலில் ஆருத்திரா தரிசனப் பெருவிழா மார்கழி 16 முதல் 25 நாள் வரை சிறப்புற நடைபெற்றது. சமயச் சொற்பொழிவுகளும் நடைபெற்றன.

# காந்தாரப்பண் பதிகங்கள்

(நான்காம் திருமுறை)

[வித்துவான் திரு. வை. சுந்தரேச வாண்டையார், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்]

ஒரு பொருள் எவ்வளவு உயர்ந்ததாயினும் அது ஒருபுலவரால் பாடப்படும் தன்மையுடைமையே சீரிய தன்மையாகக் கருதப்படும். தென்றற்காற்று எத்துணையோ பெருமை வாய்ந்தது. நம் நடராசப்பெருமான் தெற்கு நோக்கியாடுதற் குறிப்பும் அத்தென்றலில் திளைத்தற்பொருட்டே என்பர் பரஞ்சோதி முனிவர். அதனை இளங்கோவடிகள் 'புலவர் நாவில் பொருந்திய தென்றல்'—என்று அதற்கு ஏற்றம் கூறுகின்றார். அத்தகைமையில் ஒரு புலவர் புகழ்ந்த பெருமையது காந்தாரப்பண். அப்புலவரோ ஒப்பரும் பெரும்புகழ் படைத்த சிவஞானத் திருவினர். அவர் அப்பொருளைப்பற்றி,

"வேந்தாகி விண்ணவர்க்கும் மண்ணவர்க்கும்
நெறிகாட்டும் விகிர்த ஞகிப்
பூந்தாம நறுங்கொன்றை சடைக்கணிந்த
புண்ணியனர் நண்ணுங் கோயில்
காந்தாரம் இசையமைத்துக் காரிகையார்
பண்பாடக் கவினர் வீதித்
தேந்தாமென் றரங்கேறிச் சேயிழையார்
நடமாடுந் திருவையாறே"

என்று அருளிய திருப்பாசுரத்தில் கூறியுள்ளார். காந்தாரப்பண்ணிற்குரிய மற்றொரு சிறப்பாவது:—ஒரு பண்ணை ஒருவரே பாடியிருப்பர். வேறொரு பண் மற்றொரு நாயனர் திருவாக்கிற் பயிலும். உதாரணமாக மேகராகக் குறிஞ்சி என்னும் பண் திருஞானசம்பந்தப் பெருமான் ஒருவரே பாடியருளியது. திருத்தாண்டகம் அப்பர் பெருமான் ஒருவரே பாடியருளியது. அவ்வாறு இல்லாமல் எம் பெருமக்கள் மூவரும் தமது தேவாரப் பதிகங்களில் இப்பண்ணைப் பாடியிருக்கின்றனரென்றால், ஏனைப்பண்களிலும் இது சிறப்புடையதென்பது போதருமன்றோ? இன்னும் இப்பண் நாட்டியம் ஆடுதற்கேற்ற இயல் இசை அமைப்பு உடையதென்று, மேற்படி திருவையாற்றுப் பதிகம் அறிவிக்கும்.

காந்தாரம் ஒருவகைப்பண். இப்பொழுது இசை வல்லார்பால் வழங்கிவரும் இராகம் என்ற வடசொல், தமிழில் நுழைவதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே, அப்பொருளில் வழங்கியது பண் என்ற சொல்லேயாம். பண் என்னும் பெரிய இராகத்தில் தோன்றுவது திறன் என்றும், அக்காலத்தில் வழங்கியமை சிலப்பதிகாரம் முதலியவற்றால் அறியலாம். இக்காந்தாரம் காந்தார பஞ்சமம் என்றும், பியந்தைக் காந்தாரம் என்றும் இரு பிரிவினை உடையதாகும். இசைத்தமிழ்ப் பாடல் ஒவ்வொன்றும் பண் வகைகளில் ஒன்றில் அடங்கும்.

கேட்போர்க்குப் பொருள் விளங்கவும், ஓசையினிமை பெறவும் தாளவொத்து வேண்டும். இலக்கணம் அறியாதவன் இயற்றமிழ்ப் புலவன் ஆகாதவாறுபோல, தாளம் பிழைபடப் பாடுவோன் இசைத்தமிழ்ப் புலவன் ஆகான் என்னப் படுவான். இசைக்குத் தாளம் இன்றியமையாதது. அதனால் தாளம் தாய், சுதி தந்தை என்னும் வடசொற் பழமொழி யொன்றும் வழங்குகிறது. இவ்வகையால் இசைத்தமிழ்ப் பாடல்களைக் கருத்து விளங்குதற்கும் செவி யின்பத்துக்கும் ஏற்கத் தாளவொத்து அறுத்துப் பாடுவதற்குக் 'கட்டளை' என்று பெயர். சாதாரணத் தமிழில் பல்லோர் கூறும் வர்ணமெட்டு என்பதுவே இக்கட்டளை என்பதன் பொருளாம். நமது நாயன்மார் பாடியருளிய பாசுரங்களின் பண்கள் ஒவ்வொன்றும் இத்தனை கட்டளையுடையன என்று திருமுறை கண்ட புராணம் உணர்த்தும். உதாரணமாகச் சம்பந்தமூர்த்தி நாயனர் பாடியருளிய குறிஞ்சிப்பண் ஐந்து கட்டளையை யுடையது. சுந்தரமூர்த்தி நாயனர் அக்குறிஞ்சியில் இருவகையே (இரண்டு கட்டளைகளே) பாடியருளினர் என்கின்றது.

இனி அப்பர் பெருமான் திருவாக்கில் உதித்த காந்தாரத்தில் ஆறு பதிகங்கள்வருகின்றன. அவைகளில் 'சுண்ணவெண் சந்த

ளச்சாந்தும்', 'மாதர்ப்பிறைக் கண்ணியானை', 'பாடிளம் பூதத்தினனும்', எனத்தொடங்கும் மூன்று பதிகங்களும் ஒரு கட்டளையாகவும், ''மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த'', 'வனபவள வாய்திறந்து' எனத்தொடங்கும் இரண்டு பதிகங்களும் ஒரு கட்டளையாகவும்; 'கரவாடும் வன்னெஞ்சர்க்கரியானை' எனத் தொடங்கும் பதிகம் ஒரு கட்டளையாகவும். ஆக மூன்று கட்டளைகளாக அமைந்துள்ளன. இவை திருமுறை கண்ட புராணத்தில் உய்த்துணரவைப்பாகவும், உரையிற் கோடலாகவும் அமைந்துள்ளன.

காந்தாரத்தில் வரும் பதிகங்கள் ஆறிலும் நமது அப்பர் பெருமான் உபதேசித்தருளிய பொருள்களிற் சில காண்பாம்.

முதலாவது சுண்ணவெண் சந்தனச்சாந்து என்பது. இதில் ஒவ்வொரு பாசுரத்திலும் 'உடையார் ஒருவர் தமர் நாம் எதற்கும் அஞ்சவேண்டுவதில்லை. எவையும் நம்மை அச்சுறுத்தவாரா' என்பதாம். அஞ்சற்க என்பதற்கு அடையாளமாகச் சிவபெருமான் திருமேனியிற் காணும் கோலங்களேயாம். அவற்றை எம்பெருமான் தன்னுடைய அழகுக்காகவோ அல்லது பிறர் பாராட்டற்கோ அணிந்திருப்பான்? அல்லது யாதொரு பயனும் யாதொரு கருத்துமின்றி அணிந்திருப்பான் எனில்,

**பொய்படு மொன்றே புனைபூணுங் கையறியாப்**
**பேதை வினைமேற் கொளின்**

என்ற பொய்யாமொழிப்படி நெடுநாளைக்கு முன்பேயே அக்கோலங்கள் மாறியிருக்க வேண்டும். ஆகையால் எம்பெருமான் கோலங்கள் ஒவ்வொன்றும் பல உண்மைகளை நமக்குத் தெருட்டுனவாக உள்ளன. இவ்வுண்மை அறிந்து நமக்கு அருளியவர் நமது அப்ப மூர்த்திகளேயாவர். அவர் எதற்கும் பயங்கொள்ளிகளாயுள்ள பேதை மாந்தரீர்! அஞ்சன்மின் என்று அவனுடைய அடையாளங்கள் ஒவ்வொன்றையும் நமக்கு எடுத்துக் காட்டுகிறார்.

சுண்ணவெண் சந்தனச் சாந்து:—அவன் மேனியில் எங்கும் திருநீற்றுப் பூச்சுக் காணப்படுகிறது. அது என்ன விளக்குகிறது? அதனை மணிவாசகப்பெருமான் திருக்கோவையாரில் ''தொழுதெழுவார் வினைவளம் நீறு எழ நீறணி அம்பலவன்'' எனக் கூறியருளிய படி வேறு எவ்வாற்றானும் மாய்த்தற்கரிய வினையை மாய்த்துச் சாம்பராக்குடவன் தான் ஒருவனே என உணர்த்துகிறது.

திங்கட் சூடாமணி:—அது உச்சியில் அணியும் பிறைக்கொழுந்து. மாபாதகம் புரிந்தாரேனும் சரண்புகில் தூயராக்கி ஏற்றுக் கொள்கிறவன் தான் ஒருவனே என்பதை விளக்குகிறது.

புலித்தோல்:—எவற்றையும் கொல்லும் புலியைக் கொன்று அதற்கு அடையாளமாகத் தோலை அணிந்திருப்பது அன்பர்களுக்குத் தீமை செய்யவரும் கொடியோரை ஒழிப்பவன், தானே என்ற கருத்து.

பவளநிறம்:—அது செந்நிறம். அக்கியின் நிறம் செந்நிறம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே உலகத்துக்குச் சங்கார கர்த்தா எவனோ அவனேதான் உலகிற்கு முழுமுதற் கடவுளாக இருக்கமுடியும் என்னும் சிவஞானபோதக் கருத்தை அடக்கியதாகும். அனைத்தையும் அழிக்கவல்லது நெருப்பு ஒன்றே. அந்நெருப்பே சிவனது மேனியும் நிறமும்.

ஏறு:—எவ்வளவு வலிமையுடையனாயினும் அவனிடத்து அறம் இல்லையேல் அத்தனையும் பயனற்றதாகும். ஆதலின் எம்பெருமான் அறத்தையே ஊர்தியாகவும், கொடியாகவும் கொண்டுள்ளான்.

அரவு;—தனக்குத் தீங்கு இழைக்க வருபவர் எனினும், தன் சந்நிதியில்பட்ட மாத்திரத்தில் எல்லாத் தீமையும் நீங்குவர். தம்மால் ஏற்றுக்கொள்ளப்படும் பொருளும் ஆவர் என்பதனைப் பாம்பணி யுணர்த்தும்.

மூர்த்தி, தலம், தீர்த்தம் எனப்பெயர் பூண்டு அங்கு இறைவன் எழுந்தருளியிருப்பான். அவையனைத்தும் சிவசொரூபமே என்று கொண்டு வழிபடுபவர்க்கு அஞ்சுவது யாதொன்றுமில்லை. இங்குத் தீர்த்தமே இறைவன் வடிவம் என்பதற்குச் ''சென்றாடு தீர்த்தங்கள் ஆனார்தாமே'' (திருத்தாண்டகம்) என்று அடிகளார் வாக்கே சான்று. இங்கே கெடிலப்புனல் என்று சொன்ன உபலக்கணத்தாலே எஞ்சிய தலமும் மூர்த்தியும் கொள்ளப்படும். ஆக என்னை அமணர் தொடக்கினின்று எடுத்தாண்டருளிய வீரட்டானப் பெருமானும், அவன் எழுந்தருளிய இடமாகிய திருவதிகை வீரட்டானமும், அத்தலத்திற்கு

அழகு செய்யும் திருக்கெடிலமும், மூன்றும் சிவசொரூபமாகலின் அவையும் நம்மை அஞ் சற்க என்பனவாம். ஆகலின் மேற்கூறிய திருநீறு முதல் திருக்கெடிலப் புனல் வரை யுள்ள எம்பெருமானுடைய உடைமைகள் ஒவ்வொன்றும் நம்மை அச்சத்தினின்று மீட்பன என்பது இப்பதிகக் கருத்தாம். இது ஒரு பாசுரத்தின் கருத்து. ஏனையவும் இங் ஙனே விரித்துக்கொள்க.

அடுத்த பதிகம் மாதர்ப்பிறைக் கண்ணி யானை என்பது:—

இது ஐயாற்றில் நமது அப்பர்பெருமான் கண்ட கயிலைக் காட்சியைக் குறிப்பதாம். அது 'வேத முதல்வன் ஐயாற்றில் விரவுஞ் சராசரமெல்லாம் துணையொடுங் கூடக் கண் டேன் எனப் பாடி நின்றார்' என்று சேக் கிழார் பெருமான் கூறுவதற்கு உதாரணங் களாக உள்ளவை.

அடுத்த பதிகம் திருவாரூர்ப்பதிகம் "பாடிளம் பூதத்தினானும்" என்பது:—அப் பதி கத்தில் கூறப்படுவன. நமது அப்பர் பெரு மான் மற்றோரிடத்தில் கூறியருளிய "திரு நாமம் அஞ்செழுத்தும் செப்பாராகில் தீவண் ணர் திறமொருகால் பேசாராகில்"—என்று குறிப்பிட்டருளியபடி, அடியார்கள் தேவ தேவன் சிவன் பெருந்தன்மையைக் கூறும் முறை இவையெனக் காட்டுவனவாக அமைந்த கருத்தை யுடையன. எனவே இப் பதிகத்தை நாடோறும் ஓதி வருவார்களா யின் தீவண்ணர்திறன் ஒருகால் பேசிய பயன் எய்துவர், என்பது உறுதி. எனவே மாந்தர் உய்தி கூடற் கருத்தானே எழுந்ததாகும் இப்பதிகம். இதில் ஒவ்வொரு பாசுரத்திலும் சில சிறந்த கருத்துக்கள் அமைந்துள்ளன. "பையஞ் சுடர்விடு நாகப்பள்ளி கொள்வா னுள் ளத்தான்"—என்பது தல வரலாறு குறிப்ப தாகும். அவ் வரலாறு திருப்பாற்கடலில் திருமாலின் இதயத்து வைத்துப் பூசிக்கப் பெற்று அப்பூசை கொண்டருளிய தியாக ராசப் பெருமானே முசுகுந்தச் சக்கரவர்த்தி யின் முயற்சியால் இறுதியாகத் திருவாரூரில் எழுந்தருளினார் என்பதாம். இதனை அப் பதிகத்தின் பகுதி குறிப்பதாகும்.

"ஐயஞ்சின் அப்புறத்தானும்"—என்பது சித்தாந்த சாத்திரக் கருத்தை அடக்கியதாம். தத்துவ சொரூபியாகச் சிவபெருமான் இருக் கிறார் என்பதும்; அத்தத்துவங்கள் ஆத்ம தத்துவம், வித்தியா தத்துவம், சிவதத்துவம் என்று மூன்றாகப் பிரிபட்டு முறையே இரு பத்துநான்கு, ஏழு, ஐந்து என வகுக்கப்பட்டு முப்பத்தாறு தத்துவங்களாக உள்ளன. "ஐயஞ்சின் அப்புறத்தான்" என்பதில் ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும், ஏழு பிரிவா கிய வித்தியா தத்துவம் ஒன்றையும் கூட்டில் இருபத்தைந்து ஆகிறது. இதற்கு மேலுள் ளது சிவ தத்துவம். அதற்கு அதிபதி சிவ பெருமானே என்னும் தத்துவ உண்மையை இவ்வரி விளக்குகிறது.

நரியைக் குதிரை செய்வானும் என்பது:— மாணிக்கவாசகர் மூவர்க்கும் முந்தியவர் என் பதைக் குறிக்கிறது. நவீன ஆராய்ச்சியாளர் கூறுகிறபடி மூவர்க்குப் பிற்பட்டவர் அல் லர் என்பதற்கு இதுவே போதிய சான்று. நரியைக் குதிரை செய்தல் போன்ற ஆற்றல் திறனில் சிவபெருமான் வல்லுநன் என்பதை உணர்த்தற்குக் குதிரை செய்வான் என எதிர் காலத்தாற் கூறினார். அதைத் தொல்காப்பி யத்தில் வினையியலில்,

> "முந்நிலைக் காலமும் தோன்றும் இயற்கை
> எம்முறைச் சொல்லும் நிகழும் காலத்து
> மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல்
> வேண்டும்"

என்ற சூத்திரத்தால் அறிக. திருக்குறுக் கைத் திருநேரிசையில் "கூற்றினைக் குமைப் பர் போலும்" "எவிக்கு நிறைகடல் மண் ணும் விண்ணும் நீண்ட வானுலகமெல்லாம் குறைவறக் கொடுப்பர் போலும்' என்பவற் றிற்போல இங்கே எதிர்காலத்தாற் கூறினார்.

பழமொழி குறித்த காந்தாரப்பண் திருவா ரூர்ப் பெருமான்மீது பாடப்பட்டதாகும். அதில் கனியிருப்பக்காய் கவர்ந்தது, முயல் விட்டுக் காக்கைபின் போனவாறு, அற மிருக்க மறம் விலைக்குக் கொண்டவாறு, பனி நீரால் பரவை செயப்பாவித்தல், ஏதன் போர்க்காதனாய் அகப்படுதல், இருட்டறை யில் மலடு கறந்து எய்த்தவாறு, விளக் கிருக்க மின்மினித் தீக்காய்ந்தவாறு, பாழூ ரிற் பயிக்கம்புக் கெய்த்தவாறு, தவமிருக்க அவஞ்செய்து தருக்கல், என்னும் பழமொழி கள் வந்துள்ளன.

பழமொழிகளைத் தம்முடைய நூலில் வைத்துப் பாடுவதை நமது வாகீசப் பெருந் தகையாரிடத்தில் காண்கிறோம். படிக்காசுத்

தம்பிரான் தண்டலையார் சதகத்தில் பழமொழிகளை வைத்து நீதிகளைக் கூறுகிருர்.

இவ்வழக்கம் பழங்காலத்தே இருந்து வந்தது என்பதற்குப் பழமொழி என்னும் பதினெண் கீழ்க்கணக்கைச்சார்ந்த நூலே சான்ருகும். இப்பழமொழிகள் சைவநெறி இருப்பவும் அதைச்சார்ந்து முத்திபெருது, பிறநெறியைச் சார்வாரை நோக்கிக் கூறிய தாம். மேற்குறித்த பழமொழிகளில் இருட்டறையில் மலடு கறந்து எய்த்தவாறு, விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்தவாறு, கரும்பிருக்க இரும்புகடித் தெய்த்தல் என்னும் இம்மூன்றும் உமாபதி சிவத்தால் சேக்கிழார் புராணத்தில் சிவகதையைப் படிக்காமல் சமண் கதையைப் படித்துக் காலம் கழிப்பது வீண் என்பதற்கு எடுத்தாளப்படுகின்றன.

## இப்பழமொழிகளுக்கு விளக்கம்

முயல்விட்டுக் காக்கைப் பின் போனவாறு: புதரில் முயல்கள் இருக்கின்றன. அதற்குக் கண்ணிகுத்திஞல் எளிதிலும் பற்றிக்கொள்ளலாம். வேடனுக்கு நல்ல உணவுமாகும். அதற்குப் பதிலாகக் காக்கைக்குக் கண்ணி குத்திஞல் பறக்கும் பறவை கண்ணிக்குள்ளே இலேசில் அகப்படுமா? அப்படி அகப்பட்டாலும் நல்ல உணவாகுமா? அருகிலுள்ள புதரில் இருக்கும் முயலைப்பற்றி நினையாமல் பறக்கும் காக்கை இருக்கும் இடம் தேடிப்போன பேதை செயல் இது ஆகும்.

மலடு கறந்து எய்த்தல்: கறவைப் பசு இருக்கவும் அதைக் கறக்கக் கருதாமல் மலட்டுப் பசுவைக் கறந்து கைஇளைப்பவன் செயல் போல் பரிதபிக்கத்தக்கதாகும்.

பனிநீரால் பரவை செயப்பாவித்தல்: மேற்கொண்ட காரியத்துக்குக் கருவியாக மாட்டாத ஒருபொருளைக் கொள்ளின் அது நகைத்தற்கு இடமாம் என்பது அதன் கருத்து.

ஏதன் போர்க்கு ஆதனுய் அகப்பட்டேன்: ஒரு பொருளைத் திருடினவன் கையும் களவுமாக அகப்பட்டுக்கொண்ட போது, அவன் எவ்வாறு மீள முடியாதபடி வருந்துவானே அது போல் சைவநெறியில் நிற்றல் அல்லாமல், பிற நெறியில் சென்றதனுல் அவ்வாறு அகப்பட்டுத் தயங்குகின்றேன். என்பது கருத்து.

பாழூரிற் பயிக்கம்புக்கு எய்த்தவாறு: குடியில்லாத ஊரில் பிச்சைக்குப்போய்ப் பெருமல் வருந்துதலைப்போல் என்பது பொருள்.

அடுத்துத் திருக்கழிப்பாலைப் பதிகம்: வன பவளவாய் திறந்து என்பது காதலுற்று வருந்தித் தன் அளவில் பிதற்றிக்கொண்டிருக்கும் தலைவியின் நிலைமையை உணர்ந்த செவிலி கூற்ருக உள்ளன இப்பதிகத்தின் பாடல்கள். தலைவி பிதற்றுவதும், சிவபெருமானது உருவத்தோற்றங்களேயாகியிருத்தலாலும், தலைவி திருக்கழிப்பாலையினள் ஆகலாலும், ஊர்வலம் வருங்கால் திருக்கழிப்பாலைச் சிவபெருமானைக் கண்டு காமித்தாளோ என்று செவிலி ஐயுற்றுக் கூறுகின்றமை இதன் கருத்து. இப்பதிகத்தின் உள்ளுறை, ஆன்மா சிவனருட் பெருக்கில் திளைத்து நின்ற தன்மையைக் கூறியவாரும். வேறு ஒன்றும் பிதற்ருது தலைவி சிவன் திருவுருப் பொலிவு விசேடங்களையே கூறுகின்றனள் என்றதன் கருத்து 'பரமே கண்டிருப்பர் பதார்த்தங்கள் பாரார்' என்ற சாத்திரக் கருத்தை உணர்த்துவதாகும்.

அடுத்தது கச்சியேகம்பம்: கரவாடும் வன்னெஞ்சர்க்கு என்பது: இப்பதிகத்தின் ஒவ்வொரு பாசுரமும் இறைவனைத் தன் மனத்தில் வைத்துக்கொண்டதாகக் கூறப்படுகிறது. செயற்கரிய எக்காரியங்கள் செய்யினும் செய்யலாம். மனத்தை ஒரு வழிப்படுத்தலும், அதன்கண் இறைவன் திருவுருவை நிலைநாட்டலும் எவர்க்கும் இயலாத காரியம். இதனைத் தாயுமானுர் 'கண்மூடி ஒரு கணம் இருக்கவென்ருல் பாழ்த்த கன்மங்கள் போராடுதே' என்று தெரிவிக்கிருர். அவ்வரிய செயல் தமக்கு எளிதில் வாய்த்ததை அடிகளார் பாராட்டுவது இப்பதிகம். இனி இறைவனைப் பலபடப் பாராட்டிக் கூறியிருக்கும் ஒவ்வொரு பாடல்களும் நிரம்பிய பொருண்மையுடையன எனலை ஒரு உதாரணத்தால் காண்பாம். அது 'எப்போதும் இனியானை' என்பது. நாம், மாந்தர் பலரோடு பழகி வருகிருேம். சில சமயம் இருந்த நிலைமை அடுத்த நிமிஷத்தில் அவர்க்கு மாறியிருப்பதும், அந்நிலைமையும்போய் வேறு தோன்றியிருப்பதும் கண்கூடாகக் காண்கிருேம். அதற்குக் காரணம் பரிமேலழகர் கூறுகிறபடி ஒரு பகற்பொழுதிலேயே மாந்தர்க்கு முக்குணமும் மாறி மாறி வரும் என்பதாம். குணங்கள் கடந்த எம்பெருமான் எப்போதும் ஒருபடியாக இருப்பான் என்பதைக் குறிக்கத்தான் எப்போதும் இனியான் என்று கூறினுர் போலும்.

# "மனக்கவலை மாற்றல் அரிது"

### முன்னுரை

ஒவ்வொரு தனி மனிதனின் வாழ்க்கையிலும், சில நிகழ்ச்சிகளோ அநுபவங்களோ இன்றியமையாமைகளோ ஏற்பட்டு, எங்ஙனமேனும் சமய வுணர்வையும் கடவுள் நம்பிக்கையையும் எழுப்பியே விடுகின்றன.

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள்ளோரும் முடிவில் ஒரு பிடி சாம்பர் ஆகியே ஒழிகின்றனர். நிலைபேறு உடையன போலத் தோன்றும் பொருள்களெல்லாம் முடிவில் நிலைபேறு இன்றி அழிந்து மறைந்து போதலை நாம் நாடோறும் கண்டு வருகின்றோம். மனிதனின் செருக்கும், பெருமிதமும், முனைப்பும் நாளடைவில் தேய்ந்து மாய்ந்து அழிந்து போகின்றன.

பெருத்த துன்பங்களும் தொல்லைகளும் நேருங்காலெல்லாம், மனிதன் தன்னுடைய சிறுமையினை உணர வேண்டியவன் ஆகின்றான். உலகமெலாம் ஒருகுடைக்கீழ் அடக்கி ஆண்டு, யாவும் தம்மாலேயே தம் ஆற்றலுக்குப் பணிந்து நடப்பனவாகக் கருதித் தருக்கிக் களித்துநிற்கும் மாவேந்தர்களும் பிறரும், தம்மாட்டு நிகழும் காம வெகுளி மயக்கங்களும் பிறவும் தம்மை ஆட்டிப் புடைத்து அலைக்கழிப்ப, அவற்றிற்குத் தாம் அடங்கி நின்று அல்லற்பட்டு 'அந்தோ வினையே' என்று அழுங்கித் துன்பம் உழக்கின்றனர்.

தம்முடைய அறிவும் முயற்சியும் பிறவும் ஒரு வரையறைக்கு உட்பட்டனவே என்று உணர்கின்றபோது, வரையறைக்கு உட்படாத பேரறிவும் பேராற்றலும் பேரின்பமும் உடைய பரம்பொருளின் துணையை அடைய, மனிதன் பெரிதும் ஆவல்கொண்டு அலைந்தெய்த்து ஏக்கற்றுத் துடிக்கின்றான்.

நாம் விரும்பி எதிர்பார்ப்பது ஒன்றாக, நிகழ்வதோ பிறிதொன்றாக அமைந்து விடுகின்றது. எத்துணை உயர்ந்த செல்வம் செல்வாக்குகளைப் பெற்றுச் சிறந்த நிலையில் வதிபவரும், தம்முடைய நிலையில் உளநிறைவு எய்துகின்றிலர். மனிதமனம் ஆரா இயற்கை அவா மிக்கதாகத் திகழ்கின்றது. ஒரு பொருளைப் பெறுதொழிந்த வழி நேரும் துன்பம் போலவே, அப் பொருளைப்பெற்ற வழியும்கூட நிறைவு பெறாமல், ஏதேனும் ஒருவகையில் மனம் துன்புறுகின்றது. ("There are two tragedies in life: one is not to get our heart's desire; the other is to get it." —G. B, Shaw). மணிமேகலை என்னும் என்னும் செந்தமிழ்க் காப்பியம் கூறுமாறுபோல, மக்கள் வாழ்க்கையானது "அவலக் கவலை கையாறு அழுங்கல் தவலா உள்ளம் தன்பால் உடையது" என்பதில் ஐயமில்லை.

### வாழ்வும் கவலையும்

உலகில் மக்களாகப் பிறந்தார் அனைவருக்கும் ஏதேனும் ஒரு கவலை இல்லாமற் போகவில்லை. ஒவ்வொருவருக்கும் ஏதேனும் ஒவ்வொரு கவலை இருக்கத்தான் செய்கின்றது. கவலை இல்லாதவர்களை உலகத்திற் காண்டல் அரிது.

> "அன்ன விசாரம்! அதுவே
> விசாரம்! அதுவொழிந்தால்
> சொன்ன விசாரம்! தொலையா
> விசாரம்!நற் றேகையரைப்
> பன்ன விசாரம்! பலகால்
> விசாரம்!இப் பாவிநெஞ்சுக்கு
> என்ன விசாரம் வைத்தாய்!
> இறைவா கச்சி ஏகம்பனே!"

என முற்றத் துறந்த பட்டினத் தடிகள் தாமும், மனித வாழ்வின் முடிவிலா விசாரம் பற்றி மொழிந்தருள்கின்றார்!

> "பாலுக்குச் சர்க்கரை இல்லை
> என்பார்க்கும், பருக்கையற்ற
> கூழுக்குப் போட உப்பில்லை
> என்பார்க்கும், முட்குத்தித் நைந்த
> காலுக்குத் தோற்செருப்பு இல்லை
> என்பார்க்கும், கனகதண்டி
> மேலுக்குப் பஞ்சணை இல்லை
> என்பார்க்கும், விசனம் ஒன்றே"

எனவரும் தனிப்பாடல், எவ்வளவு உயர்ந்தவர்கட்கும் அவரவர்கள் நிலையில் ஏதேனும்

கவலைகள் இருத்தலை அழகுற உணர்த்து கின்றது.

### கவலை தீரக் கடவுள் வழிபாடு

வாழ்க்கையில் நமக்கு ஏற்படும் மனக் கவலைகளைப் போக்கிக் கொள்ளச் சமயவுணர் வும் கடவுள் நம்பிக்கையுமே பெரிதும் துணை புரிகின்றன. இறைவனை வழிபடுவதன் மூலம் நம் கவலைகள் பலவும் எளிதில் தீர்கின் றன. நாம் நம் கவலைகளை நீக்கிக் கொள்ளு தற்குரிய நேரிய செவ்விய வழி, இறைவனின் திருவடிகளைச் சரண் அடைதல் ஒன்றே யாகும். நம் நாட்டுச் சான்றோர்கள் அனை வரும் நமக்கு அறிவுறுத்திக் கூறிச் சென் றுள்ள இவ்வுண்மையினை, இந்நாளில் உலகப் புகழ் பெற்றுள்ள மேலைநாட்டு அறிஞர்கள் பலரும் உடன்பட்டுக் கூறத் தலைப்பட்டுள்ள னர். உலகப் புகழ்பெற்ற மனஇயல் நூல் அறிஞர் (Psychologist and Psychiatrist) ஆகிய பேராசிரியர் சி. ஜி. யுங் என் பவர் பின்வருமாறு கூறுகின்றார்:

### பேராசிரியர் சி. ஜி. யுங்

*"கடந்த முப்பது ஆண்டுகளாக உலக நாகரிக நாடுகள் அனைத்திலும் உள்ள மக்கள் பலரும் என்பாற் கலந்து ஆய்வுரை கேட் டுள்ளனர். என்னுடைய பிணியாளர்கள் அனைவருள்ளும், வாழ்க்கையின் இரண்டாம் பகுதியில்—அதாவது, முப்பத்தைந்து வய துக்கு மேல்—தமது இன்னல்கள் தீருவதற்கு உரிய கடைசி வழியாகத் தமது வாழ்க்கை யிற் சமயவுணர்வு கைவரப் பெறுதலைக் கொள்ளாதவர்கள் ஒருவராவது இல்லை.

அவர்களில் ஒவ்வொருவரும் நோயுற்ற தற்குக் காரணம், உயிர்ப்புடைய ஒவ்வொரு சமயமும் அவ்வக்காலத்தில் தன்னைப் பின் பற்றும் மக்களுக்குத் தருகின்ற மனநிறைவு ஆகிய உணர்ச்சியை, அவர்கள் பெறுமல் இழந்து விட்டமையே ஆகும்.

மீண்டும் சமய வுணர்வு கைவரப் பெறு மல், அவர்களில் ஒருவராவது உண்மையில் தம்முடைய பிணி தீரப் பெற்றிலர்."

### பிற பெரியோர்கள்

**"யார் உண்மையிற் சமய வுணர்வோடு இருக்கின்றார்களோ, அவர்களுக்கு நரம்புத் தளர்ச்சி ஏற்படுவதில்லை" என டாக்டர் ஏ. ஏ. பிரில் என்பவர் கூறுகின்றார். 'மனிதர்களை வாழ்விக்கும் ஆற்றல்களுள் கடவுள் நம் பிக்கை என்பது ஒன்று. அது முழுவதும் இல்லாமற் போகுமாயின், வீழ்ச்சியையே குறிக்கும்' என வில்லியம் ஜேம்ஸ் என்பவர் விளக்குகின்றார். 'கடவுள் வழிபாடு செய்யா மல் இருப்பின், நான் எப்போதோ பைத்தியக் காரன் ஆகி விட்டிருப்பேன்' எனக் காந்தி யடிகள் கட்டுரைத் திருத்தலை நாம் உணர் வோம்.

### பேரறிஞர் பெர்ட்ரண்ட் ரஸ்ஸல்

இவ்வாறே, உலகப் புகழ்பெற்ற மற் றொரு பேரறிஞர் ஆகிய பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் என்னும் தத்துவ—கணித மேதை கூறுவதும் ஈண்டுக் கருதி யுணரற் பாலது.

---

*"During the past thirty years, people from all the civilized countries of the world have consulted me...

Among all my patients in the second half of life—that is to say, over thirty-five years—there has not been one, whose problem in the last resort was not that of finding a religious outlook on life...

It is safe to say that every one of them fell ill, because he had lost that which the living religions of every age, have given to their followers, and none of them has been really healed who did not regain his religious outlook."

—Prof. Carl Gustav Jung.

**"Any one who is truly religious does not develop a neurosis."

—Dr. A. A. Brill.

"Faith is one of the forces by which men live, and the total absence of it means collapse."

—Prof. William James.

"Without prayer, I should have been a lunatic long ago."

—Gandhiji.

* "நம் காலநிலைக்கு வேண்டுவன சில இருக்கின்றன; விலக்கப்பட வேண்டுவன சில உள்ளன. நம் காலநிலையில் அருளுணர்வும், 'மனித இனம் இன்பமாக வாழ வேண்டும்' என்னும் விருப்பமும் தேவைப் படுகின்றன. எல்லாவற்றினும் மேலாகத் திடமான நம்பிக்கையும், புதியன படைத் தலில் துடிப்பும் இக்காலத்திற்கு இன்றி யமையாதன வாகும்.

நான் கூற முற்படும் செய்தியின் அடிப்படை அல்லது வேர் யாதெனின், மிக எளிமையானதும் மிகப் பழமை முறை யில் அமைந்ததுமான ஒன்றேயாகும். நான் கூறத் தலைப்படுவது மிகமிக எளிமையும் பழமைமுறை வாய்ந்ததாக இருத்தலும் பற்றி, ஒருசிலர் என்பாற் புன்முறுவல் பூத்து ஏளனம் செய்யக்கூடுமே என்றஞ்சி, அதனைக் குறிப்பிடுவதற்குக்கூடத் தயங்கி நான் பெரிதும் நாணம் கொள்ளுகின்றேன்.

நான் கருதும் பொருள்—அதனைக் குறிப்பிடுவதற்காக, அருள் கூர்ந்து என்னை மன்னித்து விடுங்கள்!—அன்பு, 'கிறித்தவ அன்பு' அதாவது சமயஉணர்வோடு கூடிய இரக்கவுள்ளம் ஆகும்.

இவ்வுணர்வை நீங்கள் பெறுவீர்களா யின், உங்கள் வாழ்க்கைக்கு ஓர் உயரிய நோக்கமும், செயல்களுக்கு ஒரு வழிகாட்டி யும், மனவுறுதிக்கு ஒரு காரணமும், அறி வின் நேர்மைக்கு ஓர் இன்றியமையாத தேவையும் பெற்றவர்கள் ஆவீர்கள்."

## முடிவுரை

இவ்வாற்றால் மனித வாழ்க்கைக்குக் கடவுளுணர்ச்சி எவ்வளவு இன்றியமையா தது என்றும், தனக்கு உவமை இல்லாதவ னாகிய கடவுளின் திருவடிகளைப் பற்றுக் கோடும் புகலிடமுமாகக் கொண்டு, அடைக் கலம் புகுந்து தொழுது வழிபட்டாலன்றி, மனக்கவலை மாற்றல் அரிது என்றும் உணர லாம்.

இதனையே திருவள்ளுவர் இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே பெரிதும் வற்புறுத்தியுள்ளார்.

"தனக்குவமை இல்லாதான்
தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது."

---

* "There are certain things that our age needs, and certain things it should avoid. It needs compassion, and a wish that man kind should be happy: it needs above all, courageous hope and the impulse of creativeness.

The root of the matter is a very simple and old-fashioned thing, so simple that I am almost ashamed to mention it, for fear of the derisive smile with which wise cynics will greet my words.

The thing I mean—please, for give me for mentioning it—is love, Christian love, or compassion.

If you feel this, you have a motive for existence, a guide in action, a reason for courage, an imperative necessity for intellectual honesty."

—Dr. BERTRAND RUSSEL,
Impact of Science
on Society, p. 114.

---

அழகர்கோயில்:—ஸ்ரீ கள்ளழகர் தேவஸ்தானத்தில் தெப்போற்சவம்.

நத்தம்:—ஸ்ரீ மாரியம்மன் கோயிலில் திருவிழா.

கும்பகோணம்—.ஸ்ரீ ஆதி கும்பேசுவரசுவாமி கோயிலில் மாசிமகம்.

திருவாஞ்சியம்:—ஸ்ரீ வாஞ்சிநாதர் கோயிலில் மாசிமகம்.

தென்காசி:—ஸ்ரீ காசிவிஸ்வநாதர் கோயிலில் மாசிமகம்.

மடவளாகம்:—ஸ்ரீ அரங்கநாதீஸ்வரர் கோயிலில் 6—3—63-இல் கும்பாபிஷேகம்.

திருப்போரூர்:—ஸ்ரீ கந்தசாமி கோயிலில் பிரம்மோற்சவம்; 28-2-63 முதல் 11-3-63 முடியச் சமயச் சொற்பொழிவுகள்.

திருக்கண்ணபுரம்:—ஸ்ரீ சௌரிராஜப் பெருமாள் கோயிலில் மாசிமகம்.

# கண்ணன் கதையமுதம்

[திரு. R. சீனிவாச ராகவாச்சாரியார், M.A., B.O.L. அவர்கள்]

1. உறுசகட முடையவொரு காலுற் றுணர்ந்தன
   உறிதடவு மளவிளுர வோடுற் றுநின்றன
   உறைமருத ரொடியவொரு போதிற் றவழ்ந்தன
   உறுநெறியொ ருறவுவரு தூதுக் குகந்தன

2. மறநெறியர் முறியபிற தானத் துவந்தன
   மறமுறையில் வருமொருவி மானத் துறைந்தன
   மறமகளிர் வருடமலர் போலச் சிவந்தன
   மறுபிறவி யறுமுனிவன் மாலுக் கிசைந்தன

3. அறிகுருவை யுறைமுனிவர் நாவுக் கமைந்தன
   அறுசமய மறிவறிய தானத் தமர்ந்தன
   அறமறைய விசயனணி தேரிற் றிகழ்ந்தன
   அடலுரக படனழிய வாடிக் கடிந்தன

4. வெறியுடைய துளவமலர் வீறுக் கணிந்தன
   விழுதுகரி குமரனுரு மேவச் சிறந்தன
   விறலிடையர் படையடைய வீயத் துறந்தன
   விடுதியுறை பெரியபெரு மாணற் பதங்களே.

## முன்னுரை

இதுபதினாறு சீர் ஆசிரியச் சந்த விருத்தம். தனதனன தனதனன தானத் தனந்தன என்னும் சந்தக் குழிப்பையுடையது. நான்கு அடிகள் கொண்டது. ஒவ்வோரடியிலும் நான்கு பகுதிகள் உள்ளன. பதினாறு பகுதிகளிலும் சீர்கள் ஒரே முறையில் அமைந்துள்ளன. ஒவ்வொரு பகுதியிலும் மூன்றாம் சீரின் முதலெழுத்தைத் தவிர மற்றவையெல்லாம் குறில்கள். மூன்று நான்காம் சீர்களிடையில் வல்லின மயக்கங்களும்,நான்காம் சீர்களில் வல்லின மெல்லின மயக்கங்களும் தவறாமல் அமைந்திருக்கின்றன. ஒவ்வோரடியிலும் ஒன்று மூன்று பகுதிகளின் இரண்டாம் எழுத்துக்கள் 'ற' கரவெதுகையாயமைந்துள்ளன. மோனைகளும் ஒழுங்காக அமைந்துள்ளன. வடமொழியில் பெரும்புலமை மிக நிரம்பிய ஸ்ரீதேசிகன் என்ற தமிழ் மகாகவி செய்தருளிய அதிகார சங்கிரஹம் என்ற நூலில் ஐம்பத்தொன்றாவது பாட்டாக இஃதமைந்துளது.

## செய்யுட் பொருட் சுருக்கம்

வடமதுரையில் கம்ஸனுடைய சிறைச்சாலையில் தேவகீ வஸுதேவர்களுக்குக் குமாரனாய் அவதரித்த கண்ணன், முதலில் கோகுலத்திலும் பிறகு பிருந்தாவனத்திலுமாக யசோதை நந்தகோபர்களுடைய பிள்ளையாக வளர்ந்தான். திருமாலே, தன்னைக் கொல்வதற்காகக் கண்ணனாய்ப் பிறந்து மறைந்து வளர்ந்து கொண்டிருக்கின்றான் என்றறிந்த கம்ஸன் (கண்ணன் மாமன்) அக்கண்ணனைக் கொல்வதற்காகப் பல அசுரர்களை முதலில் கோகுலத்திற்கும் பிறகு பிருந்தாவனத்திற்கும் அனுப்பினான். அவர்களில் ஒருவன் சகடாஸுரன்.

கோகுலத்தில் கண்ணன் சின்னஞ்சிறு குழந்தையாயிருந்தபொழுது யசோதைமுதலியவர்கள் ஔத்தானிகம் என்ற விழாவிற்காகப் புறப்பட முயற்சி செய்துகொண்டிருந்தார்கள். மாளிகை வாயிலில் பல வண்டிகள் சாமான்களோடு நின்றன. அவைகளுக்கிடையே சகடாஸுரனும் ஒரு அழகியவண்டியுருவில் நின்றான். அவ்வண்டியிலும் சாமான்கள் ஏற்றப்பட்டன.

கண்ணனுக்குத் திருமஞ்சனமாட்டி அவ்வண்டி (யடி)யில் கட்டிய ஓர் ஏணையில் தூங்க விட்டுவிட்டு யசோதை வேறுபணியில் ஈடுபட்டிருந்தாள். அதுவே சமயமென்று நினைத்த சகடாஸுரன் குழந்தையை ஏணையோடு இழுத்துக்கொண்டு சென்று கொன்றுவிட முயன்றான். மாயக்குழந்தை கண்விழித்துக்கொண்டு அழுதது. ஒருவரும் வரவில்லை. சின்னஞ்சிறு கால்களை உதறியுதைத்தது. அவ்வளவுதான். வண்டி அக்குவேறு ஆணிவேறாக முறிந்தது. சகடாஸுரன் தன்னுருவில் விழுந்திறந்தான். இக்கதை இப்பாட்டின் முதலடியின் முதற்பகுதியால் கூறப்படுகிறது.

கண்ணனுடைய இத்திருவிளையாடலும் பிறவும் அவனுடைய திருவடிகள் செய்ததாகக்கொண்டு இப்பாட்டில் வர்ணிக்கப்படுகின்றனவென்று வாசகர்கள் உணரவேண்டும்.

## சகடாசுர வதம்

### 1—1 உறுசகட முடையவொரு காலுற் றுணர்ந்தன

(பொருள்) கண்ணனுடைய இளமைப் பிராயத்தில் அவனை அழிப்பதற்காகச் சகடா

ஸுரன் வண்டியுருவில் வந்திருப்பதை உற்றுணர்ந்த அக்கண்ணன் திருவடிகள் அவ்வழிவை அச்சகடாஸுரனுக்கே உண்டாக்கி விட்டன.

—பாகவதம் 10-7.

இக்கதை, கண்ணனை அழிக்கவந்த பிற அசுரர்கள் அழிந்த நிகழ்ச்சிகளுக்கெல்லாம் ஒரு எடுத்துக்காட்டு. இவ்வகையில் பிற நிகழ்ச்சிகளையும் அறிக.

வெண்ணெய் திருடுதல்

யசோதை தயிர்கடைந்துகொண்டிருந்தாள். குழந்தை (கண்ணன்) முலையுண்ண வந்தான். உண்பித்துக்கொண்டிருந்த தாய் குழந்தைக்குத் திருப்தி யேற்படுவதற்கு முன்பே கீழே விட்டுவிட்டு, சமையல் அறையில் அடுப்பில் பொங்கிக்கொண்டிருந்த பாற்குடத்தை இறக்கிவைப்பதற்குச் சென்றுவிட்டாள். கோபமடைந்த கண்ணன் தயிர்ப் பானையை உடைத்துவிட்டு, அம்மாவுக்குத் தெரியாமல் அறைக்குள் தவழ்ந்து சென்று அங்கிருந்த ஒரு உரல்மேல் மெள்ள ஏறி உயரே தொங்கிக்கொண்டிருந்த உறியில் இருந்த வெண்ணையைத் திருடினன். இக்கதை இப்பாட்டின் முதலடியின் இரண்டாம் பகுதியில் கூறப்படுகிறது.

## 1—2 உறிதடவு மளவிலுர லோடுற்று நின்றன

(பொருள்) வெண்ணைச்சட்டி வைக்கப் பட்டிருந்த உறி கைக்கெட்டாத உயரத்திலிருந்தபடியால் அதை எட்டிப் பிடிப்பதற்காகக் கண்ணனுடைய திருவடிகள் மெதுவாக உரல்மேலேறிப் பத்திரமாக நின்றன.

—பாகவதம் 10-9.

உரலேறி வெண்ணை திருடிய இந்நிகழ்ச்சி, தன் பக்தர்களிடத்தில் கண்ணன் எவ்வளவு எளிய முறையில் பழகி இன்ப வாழியில் அவர்களை ஆழ்த்தியிருக்கிறுன் என்பதற்கு ஒரு எடுத்துக்காட்டு. இதுபோன்ற பிற நிகழ்ச்சிகளும் இவ்வழியில் உணரப்பட வேண்டும்.

மருதமரம் சாய்த்தல்

இவ்வாறு வெண்ணெய் திருடிய கண்ணனை அவ்வுரலிலேயே கட்டிப்போட்டுவிட்டு யசோதை தன் காரியங்களைச் செய்துகொண்டிருந்தாள். யசோதை மாளிகை வாயிலில் இரண்டு மருதமரங்கள் ஜோடியாக நெருங்கி நின்றுகொண்டிருந்தன. நாரதரால் 'மரங்களாகக் கடவீர்கள்' என்று சபிக்கப்பட்ட நளகூபரன் மணிக்ரீவன் என்றவர்கள் அவ்வாறு நின்றுகொண்டிருந்தனர். உரலில் கட்டப்பட்ட கண்ணன் உரலை யிழுத்துக் கொண்டு அம்மரங்களிடையே நுழைந்தான். குறுக்காக உருண்ட அவ்வுரல் மரங்களில் சிக்கிக்கொண்டது. கண்ணன் தவழ்ந்து கொண்டே வலிய இழுத்தான். மரங்கள் வேருடன் பெயர்ந்து விழுந்தன. இவ்வாறு சாபத்தினின்றும் விடுபட்ட நளகூபர மணிக்ரீவர்கள் கண்ணனை வணங்கிச் சென்றனர். இக்கதை இப்பாட்டின் முதலடியின் மூன்றும் பகுதியில் கூறப்படுகிறது.

## 1-3 உறைமருதர் ஒடியவொரு போதிற் றவழ்ந்தன

(பொருள்) நந்தகோபர் மாளிகை வாயிலில் மருத மரங்களாக வளர்ந்து நின்றுகொண்டிருந்த நளகூபரன் மணிக்ரீவன் இருவரும் இற்று விழும்படி அவர்களிடையில் ஒரு சமயம் கண்ணன் திருவடிகள் தவழ்ந்தன.

—பாகவதம் 10-10.

இந்நிகழ்ச்சி சாபமுற்றவர்கள் சாபத்தினின்று விடுபடும் பிற நிகழ்ச்சிகளுக்கெல்லாம் ஒரு எடுத்துக்காட்டு. பிறவும் இவ்வாறு காண்க.

அக்ரூரர் அழைப்பு

கண்ணனை மதுரைக்கே அழைத்துக் கொண்டுபோய்க் கொன்றுவிட வேண்டுமென்று தீர்மானித்த கம்ஸன், அக்ரூரர் என்பவரைப் பிருந்தாவனத்திற்கு அனுப்பிப் பலராமனையும் கண்ணனையும் மதுரையில் நடக்க விருக்கும் வில்விழாவுக்கு அழைத்துவரச் சொன்னுன். அக்ரூரர் என்பவர் யதுகுலத்தைச்சேர்ந்தவர். கண்ணனுக்குத் தகப்பன் முறை உறவாகவேண்டும். அவ்வழைப்பைக் கண்ணன் உவகையுடன் ஏற்றுக்கொண்டான். இக்கதை பாகவதம் 1-4 இல் கூறப்படுகிறது.

## 1-4 உறுநெறியொ ருறவுவரு தூதுக் குகந்தன

(பொருள்) நன்னடத்தை யுடையவரும் ஒப்பற்றவரும் உறவினருமாகிய அக்ரு

ரூரர் வந்தழைத்ததைக் கண்ணன் திருவடிகள் உகந்து ஏற்றுக்கொண்டன.

—பாகவதம் 10-38.

**கொடியரை அழித்தல்**

பிறகு பலராமனுடன் கூடிய கண்ணன் அக்ரூரருடன் மதுரைக்கு வந்து தங்களைக் கொல்லவிருந்த கம்ஸன் முதலிய துஷ்டர்களைக்கொன்றான். இக்கதை இப்பாட்டின் இரண்டாமடியின் முதற்பகுதியில் கூறப்படுகிறது.

### 2-1 மறநெறியர் முறிய பிற தானத்து வந்தன

(பொருள்) தீயவழியில் செல்கின்ற பகைவர்களை அழிப்பதற்காகப் பிருந்தாவனத்தைவிட்டுப் பிற தானம் (வேறு இடம்) ஆகிய மதுரைக்குக் கண்ணன் திருவடிகள் வந்தன. —பாரதம் 10-44.

**இந்திரன் சுதன்மையை அனுப்புதல்**

பிறகு கண்ணன் மதுரையை விட்டு விட்டு மேற்குக் கடலில் ஒரு சிறு தீவில் துவாரகை யென்ற நகரத்தை நிர்மாணித்துக் கொண்டு தானும் தன்னைச்சேர்ந்த யாதவர்களுமாக அங்கு வசித்தான். கண்ணனுடைய வீரத்தை மெச்சி இந்திரன், சுதன்மை என்ற தேவவிமானம் முதலியவைகளை அனுப்பி வைத்தான். அதில் கண்ணன் திருவடிகள் அமர்ந்தன. இக்கதை 2,2–ல் கூறப்படுகிறது.

### 2-2. மறமுறையில் வருமொரு விமானத் துறைந்தன

(பொருள்) வீரத்தை மெச்சி இந்திரன் அனுப்பிய சுதன்மை என்ற விமானத்தில் கண்ணன் திருவடிகள் உறைந்தன.

—பாகவதம் 10-50.

**மறமகளிரை மணத்தல்**

கண்ணன் பிறகு மலர்மகள் அவதாரமாகிய ருக்மிணீ முதலியவர்களை வீரத்தால் ஜயித்து மணந்துகொண்டான். அவர்கள் கண்ணனிடத்தில் மிகவுமன்புடையர்களாய்த் திருவடிகள் வருடல் முதலிய பல கைங்கர்யங்களைச் செய்துகொண்டு இனிது வாழ்ந்தனர். இக்கதை பாகவதம் 2-3 இல் கூறப்படுகிறது.

### 2-3 மறமகளிர் வருட மலர்போலச் சிவந்தன

(பொருள்) திருமகள் அவதாரமாகியவரும், மறத்தினால் ஜயிக்கப்பட்டவருமான மனைவியர்கள் தம் மெல்லிய கைகளால் மலரினும் மெதுவாகிய கண்ணன் திருவடிகளை வருடும்பொழுது அத்திருவடிகள் அந்நோவையும் பொறுக்காது மலர்போல வாடிச் சிவந்து காட்டின. —பாரதம் 10-54.

**நாரதர் போற்றுதல்**

கண்ணன் 16,000 தேவிமார்களுடன் துவாரகையில் 16,000 உருவங்களுடன் தனித்தனி வீடுகளில் தனித்தனியே வாழுங்கால், நாரத முனிவன் அங்கு ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று கண்ணனைப் பல உருவில் வணங்கித் தன் பக்தியைச் செலுத்தினர். இக்கதை பாகவதம் 2-4 இல் கூறப்படுகிறது.

### 2-4 மறுபிறவி யறுமுனிவன் மாலுக் கிசைந்தன

(பொருள்) மறு பிறவியில்லாதவரான நாரத முனிவனின் பக்தியை இசைந்து ஏற்றுக்கொண்டன. —பாகவதம் 10-69.

**முனிவரர்கள் துதித்தல்**

ஒரு சமயம் சூரியக்கிரகண ஸ்நானத்திற்காகக் குருக்ஷேத்திரத்திலுள்ள ஸமந்த பஞ்சகம் என்ற குளத்துக்குப் பலராமனும் கண்ணனும் போனார்கள். அப்பொழுது அவ்விடத்திற்கு நந்தகோபர் வஸுதேவர் பீஷ்மர் துரோணர் பாண்டவர்கள் திருதராஷ்டிரன் முதலிய கௌரவர்கள் எல்லோரும் வந்தனர். வியாஸர் நாரதர் முதலிய பல முனிவர்களும் அங்கு வந்தனர் அம்முனிவர்கள் அரசர்களின் முன்னிலையில் கண்ணனைப் பலவாறு புகழ்ந்து வணங்கினர். இம்மாபெரும் நிகழ்ச்சி 3-1 இல் கூறப்படுகிறது.

### 3-1 அறிகுருவை யுறைமுனிவர் நாவுக் கமைந்தன

(பொருள்) கிரகண ஸ்நானத்துக்காகக் குருக்ஷேத்திரத்திலுள்ள ஸமந்த பஞ்சகத்திற்கு வந்த அறிவாளிகளான வியாஸர் முதலிய முனிவர்கள் புகழ்ச்சிக்குரியவைகளாய்க் கண்ணன் திருவடிகள் இருந்தன.

—பாகவதம் 10-48.

### பிருகு முனிவர் பரத்துவம் நிறுவுதல்

*பிறகு ஒரு ஸமயம் ஸரஸ்வதி நதிதீரத்தில் ஸத்ரயாகம் செய்த முனிவர்கள் நான்முகக் கடவுளின் புதல்வரான பிருகுமுனியை, 'மும்மூர்த்திகளில் சிறந்தவர் யார்? என்று கேட்க அவர் முறையே ஸத்யலோகம் கைலாசம் வைகுண்டம் இவைகளுக்கு நேரில் சென்று அவ்வம்மூர்த்தியை வணங்கி எல்லோரிலும் ஸ்ரீ ஹரியே சிறந்தவர் என்று பரதேவதா நிர்ணயம் செய்து திரும்பிவந்து தன் முடிவை முனிவர்களிட முரைத்தார். அவர்களும் அங்கீகரித்தனர். இக்கதை 3-2 இல் கூறப்படுகிறது.*

## 3-2 அறுசமய மறிவரிய தானத் தமர்ந்தன

*(பொருள்) சாக்கியம் சைவம் முதலிய ஆறு மதங்களும் அறிய முடியாத உயர்ந்த பரமபதத்தில் பரம்பொருளாய்க் கண்ணன் திருவடிகள் அமர்ந்தன. -பாகவதம் 10-89.*

### கீதை உபதேசித்தல்

*பாரதப்போர் துவங்கிற்று. கண்ணன் அர்ச்சுனனுக்குத் தேர்ப்பாகனாகி அத்தேரைப் போர்க்களத்தின் முன்னணியில் நிறுத்தினான். போர்க்களத்தில் இரண்டு பக்கங்களிலும் தன்னுடைய உறவினர்களும் ஆசிரியர்களும் நிற்பதைப் பார்த்த அர்ச்சுனன் போரினின்று விலக நினைக்க அப்பொழுது கண்ணன் அவ்வழகிய தேரில் இருந்து கொண்டே அவனுக்குக் கீதையை உபதேசித்துப் போர்செய்ய ஊக்கினான். இக்கதை 3-3-ல் கூறப்படுகிறது.*

## 3-3 அறமறைய விசயனணி தேரிற் றிகழ்ந்தன

*(பொருள்) கீதையை உபதேசம் செய்யும் முக்கிய நோக்குடன் அர்ச்சுனனுடைய அழகிய தேரில் கண்ணன் திருவடிகள் அமர்ந்து விளங்கின. —பாரதம்.*

### துரியோதனனைக் கடிதல்

*பாரதப்போர் நடந்தது. பொல்லார் நல்லார் பலர் அழிந்தனர். முடிவில் அரவக் கொடியோனாகிய வலிமிக்க துர்யோதனனும் அழிந்தான். இவையெல்லாம் கண்ணன் ஸூத்ரதாரியாக இருந்து நடத்தப்பட்டன. இக்கதை 3-4-ல் கூறப்படுகிறது.*

## 3-4 அடலுரக படனழிய ஆடிக் கடிந்தன

*(பொருள்) பலம் மிக்கவனும் பாம்பைக் கொடிச்சின்னமாக வுடையவனுமாகிய துரியோதனன் அழியும்படி கண்ணன் திருவடிகள் போராடிக் கடிந்தன. —பாரதம்.*

### அருச்சுனனின் மலர் அணிதல்

*ஒரு ஸமயம் அருச்சுனன் கண்ணனுடைய திருவடிகளில் திருத்துழாய்கொண்டு அர்ச்சித்து, அத்துழாய் தான் வணங்க வேண்டுமென்றிருந்த தெய்வத்தின் முடியிலிருந்ததைக் கண்டு கண்ணன் எவரினும் சிறந்தவன் என்றறிந்தான். இக்கதை 4-1-ல் கூறப்படுகிறது.*

## 4–1 வெறியுடைய துளவ மலர் வீறுக் கணிந்தன

*(பொருள்) நல்ல மணம் பொருந்தியவைகளும் அருச்சுனனால் அர்ச்சிக்கப்பட்டவைகளுமான மலர்போன்ற திருத்துழாய்த் தளங்களை அணிந்து தம் பெருமையைக் கண்ணன் திருவடிகள் உலகுக்கு விளக்கின.*

*—பாரதம்.*

### கருவிடைக் குழவியைக் காத்தல்

*பாரதப்போரின் இறுதியில் அச்வத்தாமனால் பிரயோகிக்கப்பட்ட பிரம்மசிரஸ் என்ற அஸ்த்ரம் உத்தரை (அருச்சுனன் மருமகள்-அபிமன்யுவின் மனைவி)யின் கர்ப்பத்தைக் கொளுத்தி அழிக்கத் தொடங்கிய பொழுது, அவ்வுத்தரையால் வேண்டப்பட்ட கண்ணன் தன்னுடைய சக்ராயுதத்தால் அக் கர்ப்பத்தைக் காப்பாற்றினான். பிறகு இரண்டு அஸ்த்ரங்களிடையில் எரிந்து கரியாய்ப்போன கர்ப்பம் ஒரு கரி விழுதாகப் பிறந்தபொழுது கண்ணன் தன்பாவனத் திருவடி ஸம்பந்தம் தந்தருளி அக்கரி விழுது ஒரு அழகிய சிறு குமரனாக (பரீக்ஷித்) மாறும்படி செய்தான். இக்கதை 4-2-ல் கூறப்படுகிறது.*

## 4-2 விழுதுகரி குமரனுரு மேவச் சிறந்தன

*(பொருள்) கண்ணன் திருவடிகள், கரி விழுதாகப் பிறந்த உத்தரையின் கர்ப்பம் உயிர்பெற்றுப் பரீக்ஷித் என்ற குமரனாக உருப்பெறும்படி செய்து பெருமை பெற்றன.*

**யாதவரை அழிவித்தல்**

கண்ணனுடைய அவதார முடிவில் கண்ணன் ஏவலால் யாதவர்கள் எல்லோரும் துவாரகையை விட்டுவிட்டுப் பிரபாஸம் என்ற இடத்தையடைந்து குடித்துவிட்டு ஒருவர்க்கொருவர் சண்டையிட்டுக் கொன்றுகொண்டு மடிந்தனர். இது ரிஷிகளின் சாபத்தின் பயன். இவ்வாறு யாதவகுலம் முழுதும் அழிந்தது. இது கண்ணனுடைய திருவுள்ளப்படி நடந்ததே. இக்கதை 4-3—ல் கூறப்படுகிறது.

## 4–3 விறலிடையர் படையடைய வீயத் துறந்தன

(பொருள்) குடித்துக் கொழுப்பும் பலமும் அடைந்த இடையர்படை முழுதும் ஒன்றுக்கொன்று கொன்று மடியும்படி கண்ணனுடைய திருவடிகள் தெரிந்தே அவர்களைத் துறந்துவிட்டன. —பாரதம் 11-30.

**வைகுந்தம் எய்துதல்**

அவதார காரியம் முடிவடைந்ததும் கண்ணன் ப்ரம்மா முதலிய தேவர்கள் முன்னிலையில் தன் திருமேனியை நீத்து ஸ்ரீ வைகுண்டத்தை யடைந்தான். இக்கதை 4-4-ல் கூறப்படுகிறது.

## 4–4 விடுதியடை பெரிய பெருமாள் நற் பதங்களே

(பொருள்) பரவாஸுதேவன் (பரம்பொருள்) இவ்வாறு கண்ணனாக அவதரித்துப் பூவுலகில் செய்யவேண்டிய காரியங்களைச் செய்து முடித்துவிட்டுத் தன்னுடைய விடுதி (வீடு) யான ஸ்ரீ வைகுண்டத்தை யடைந்தான். கண்ணனுடைய நல்ல திருவடிகள் பரமபதம் போய்ச்சேர்ந்தன.

—பாரதம் 11-31.

**முடிவுரை**

இவ்வாறு மகாகவியான ஸ்ரீ நேசன் கண்ணன் கதையமுதத்தை இச்சிறிய சந்த விருத்தத்தினால் அழகுறப் பாடியளித்துள்ளார். சொல்லழகும் பொருளழகும் பிறசிறப்பும் நன்கு பொருந்திய இப்பாட்டைப் பாடிச் சிறுவர் சிறுமியர் பெரியோர் எல்லோரும் இன்புறலாம்.

---

# நடைபெற்ற நிகழ்ச்சிகள்

(✳)

ஸ்ரீ வடபழனி ஆண்டவர் கோயிலில் 10-3-63ல் திருமுருக ஸ்ரீ கிருபானந்தவாரியர் அவர்களின் அருணகிரியாரும், வில்லிபுத்தூராரும் என்னும் பொருள்பற்றிச் சொற்பொழிவு.

**திருவலம்:**—ஸ்ரீ வில்வநாதசுவாமி கோயிலில் பிரம்மோற்சவம்.

**பின்னத்தூர்:**—ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலில் மாசிமக உற்சவம்.

**திருவல்லிக்கேணி:**—ஸ்ரீ பார்த்தசாரதி கோயிலில் 3-3-63 முதல் 7-3-63 வரை வேதவல்லித் தாயாருக்கும், மூலவருக்கும் அஷ்டபந்தன கும்பாபிஷேகம், அறநிலைய அமைச்சர் திரு. பக்தவத்சலம் அவர்கள் முன்னிலையில் நடைபெற்றது.

**திருக்கடம்பந்துறை:**—ஸ்ரீ கடம்பவனேஸ்வரர் கோயிலில் மாசிமகப் பிரம்மோற்சவம்.

**மதுரை:**—இம்மையில் நன்மைதருவார் கோயிலில் மாசிமகப் பிரம்மோற்சவம்.

**கும்பகோணம்;**—ஸ்ரீ சாரங்கபாணி சுவாமி கோயில் மாசிமகத் தெப்ப உற்சவம்.

**ஸ்ரீமுஷ்ணம்:**— ஸ்ரீ பூவராக சுவாமி கோயிலில் மாசிமகப் பிரம்மோற்சவம்.

**ஜடாயுபுரம்:**—ஸ்ரீ கிருஷ்ண சைதன்ய மடத்தில் குருபூசை.

**திரும்புறம்பயம்:**— ஸ்ரீ சாக்ஷிநாதசுவாமி கோயிலில் மகோற்சவம்.

**வழுவூர்:**—வீரட்டேஸ்வரர் கோயிலில் பிக்ஷாடன மகோற்சவம்.

**பெரம்பலூர்:**— ஸ்ரீ அபராத ரக்ஷகர் ஆலயத்தில் மாசிமகம்.

**திருமழபாடி:**—ஸ்ரீ வைத்தியநாத சுவாமி கோயிலில் மாசிமகப் பிரம்மோற்சவம்.

**திருநின்றவூர்:**—ஸ்ரீ பக்தவத்சல சுவாமி தேவஸ்தானத்தில் பிரம்மோற்சவம்.

**தேரழுந்தூர்:**—ஸ்ரீ தியாகப்பிரம்ம ஆராதனை மகோற்சவம்.

**மன்னார்குடி:**—ஸ்ரீ ராஜகோபால சுவாமி கோயிலில் பிரம்மோற்சவம்.

# திருநாவுக்கரசு நாயனார்

[வித்துவான் திரு. சி. அருணைவடிவேலு முதலியார், தருமபுரம்.]

(முன் இதழ்த் தொடர்ச்சி)

ஒன்று "கூற்றுவன்காண்" எனவும், மற்றொன்று, "உரித்தவன் காண்" எனவும், வரும் தொடக்கங்களை உடையன. அவை இரண்டும் இறைவனது பெருமைகள் பலவற்றையும் வகுத்து வகுத்து விளக்குவன.

"கூற்றுவன்காண்" என்னும் திருப்பதிகத்துள் "தோற்றம் நிலையிறுதிப் பொருளாய் வந்த-மருந்தவன்காண்" "தோற்றக்கேடில்லா தான்காண்" "மலர்தூவி நினைந்தெழுவா ருள்ளம் நீங்கா-திருந்தவன்காண்" "தன்னொப் பில்லாத் தத்துவன்காண்", "மலைமங்கை பங்கா என்பார்—வாயவன்காண்" "திருவடியே நினைந்தெழுவார் உள்ளம் மேயவன்காண்" "அடைவார் தங்கள்-பற்றவன் காண்-அஞ்செழுத்தும் நினைவார்க் கென்றும்-மருந்தவன்காண்", "இயம்பி - விம்மாநின் றழுவார்கட் களிப்பான் றன்காண்", "அற்புதன்காண் சொற்பதமுங் கடந்து நின்ற-எம்மான்காண்" என்னும் அரும்பொருள்கள் அருளப்பட்டுள்ளன.

"உரித்தவன்காண்" என்னும் திருப்பதிகத்துள், "ஓங்காரத் தொருவன்காண்; உணர் மெய்ஞ் ஞானம்-விரித்தவன்காண்", "நேசன் காண் நேசர்க்கு; நேசந் தன்பால் இல்லாத நெஞ்சத்து நீசர் தம்மைக்-கூசன்காண்; கூசாத நெஞ்சு தஞ்சே குடிகொண்ட குழகன்காண்" "பேரா யிரங்க ளேத்தும்-பெரியவன்காண்", "சமயமவை ஆறினுக்குந் தலைவன் றன்காண்", "தொண்டுபடு தொண்டர் துயர் தீர்ப்பான் றன்காண்" என்னும் அரிய திருமொழிகள் அமைந்து விளங்குகின்றன.

"முந்தைகாண் மூவரினும் முதலா னன்காண்
மூவிலைவேல் மூர்த்திகாண் முருக வேட்குத்
தந்தைகாண் தண்கடமா முகத்தி னர்க்குத்
தாதைகாண் தாழ்ந்தடியே வணங்கு வார்க்குச்
சிந்தைகாண் சிந்தாத சித்தத் தார்க்குச்
சிவனவன்காண் செங்கண்மால் விடையேறும் [றேறும்
எந்தைகாண் எழிலாரும் பொழிலார் கச்சி
ஏகம்பன் காண்அவன்என் எண்ணத் தானே"

என்னும் அத்திருப்பதிகத் திருப்பாடல், பல இன்றியமையாத பொருள்களை நமக்கு அறிவுறுத்துவதாய் உள்ளது. இவ்வாறு இரண்டு திருப்பதிகங்கள் ஒரே வகையான நிலையில் அமைந்து விளங்குதல் பெரிதும் அரிது. திருவையாற்றில் அருளிச் செய்யப்பட்ட திருவடித் திருப்பதிகங்கள் இரண்டு இவ்வாறு உள்ளன; வேறொன்றும் இவ்வாறு காணப்படவில்லை.

இங்ஙனம், முன்னரும் நாயனார் ஒரு திருப்பதிகத்தை, "மதிற்கச்சி - ஏகம்பம் மேயானை என்மனத்தே வைத்தேனே" என விளங்கும் நிலையில் அருளிச் செய்து, பின்னரும் நினைந்து மீண்டு வந்து வணங்கி, "எழிலாரும் பொழிலார் கச்சி-ஏகம்பன் காண் அவன் என் எண்ணத் தானே" என இரண்டு திருப்பதிகங்கள் அருளிச்செய் திருத்தலை நோக்குமிடத்து, இத் திருத்தலத்தின்கண் நாயனார்க்குத் தனித்ததோர் ஆர்வம் இருந்திருத்தல் வேண்டும் என எண்ண இடம் உண்டாகின்றது. அஃது அவர்தம் குடிவழித் தொடர்பாய் முதற்றொட்டே இயற்கையில் அமைந்ததாதலுங் கூடும்; அன்றி, நாயனார் இதன் சிறப்புணர்ந்து தாம் சமண் சமயம் சார்தற்கு முன்பே தனித்த முறையில் உளங்கொண்டு பற்றியதாகலுங் கூடும். ஒரு தலத்தினை வணங்கித் திருப்பதிகம் அருளிச் செய்யுங்கால், அத்திருப்பதிகத்துள் மற்றைய தலங்களையும் நினைந்தருளுதல் நாயனாரது அன்பின் பெருமையாயினும், திருவேகம்பத்தை அவ்வாறு நினைத்தருளுதலில் ஒரு தனிச் சிறப்புக் காணப்படுதலை, அவர்தம் திருப்பதிகங்களை நோக்கின் அறியலாகும். சமண் சமயத்தினின்றும் நீங்கித் திருவருள் பெற்றுத் திருவதிகையில் இருந்த அப்பொழுதே அடையாளத் திருத்தாண்டகத்தில், "கொழும்பவளச் செங்கனிவாய்க் காமக்கோட்டி கொங்கையிணை அமர்பொருது கோலங் கொண்ட-தழும்புளவே;......அவனை இல் அதிகைவீ ரட்ட னமே" என்றருளிச் செய்தார்.

கச்சி ஏகம்பம் இத்தகைய தனிச் சிறப்புடையதாதற்குக் காரணம், மக்களாயுள்ளார் ஒவ்வொருவரும் இன்றியமையாது செய்யற்பாலனவாகிய அறத்தினையும், சிவவழிபாட்டினையும், மக்கள் அனைவர்க்கும் தாயாகிய அம்மை, அவர்கள் பொருட்டாகவே என்றும் செய்து நிற்றலேயாம். ஆகவே, அதனை மக்கள் யாவரும் நாள்தோறும் தவறாது நினையும் கடப்பா ருடையராவர் என்க. இன்னும், மக்கள் அறத்தினையும் சிவ வழிபாட்டினையும் செய்யுமிடத்தும் அவை குறை பாடின்றி இனிது நிரம்புதற்பொருட்டு, அத் தலத்தில் அம்மை செய்யும் அச் செயல்களை நினைதல் இன்றியமையாதது என்பதும் பெறப்படுதல் காண்க. 'ஏகம்பன் காண் அவன் என் எண்ணத் தானே'' என்னுந் திருத்தாண்டகத் திருப்பதிகங்களுடன் திருவேகம்பத்திற்கு உள்ள நாயனார் திருப்பதிகங்கள் ஏழு என்க. திருக்கச்சி மேற்றளிக்கு ஒரு திருப்பதிகம் உளது.

## பிறதலங்களை வணங்குதல் :

மறுமுறையும் காஞ்சியை அடைந்து திருவேகம்ப நாதரை வணங்கி மகிழ்ந்த பின்பு, நாயனார், தொண்டை நாட்டில் உள்ள பிற தலங்களையும் வணங்க நினைந்து, காஞ்சியினின்றும் புறப்பட்டு, திருக்கழுக்குன்றம், திருவான்மியூர், திருமயிலாப்பூர் முதலிய தலங்களை வணங்கித் திருப்பதிகம் அருளிச் செய்து திருவொற்றியூரை அணுகியருளினார்.

திருவொற்றியூரில் உள்ள அடியார்கள், திருநாவுக்கரசர் எழுந்தருளி வருதலை அறிந்து, திருவொற்றியூர் வீதிகளைத் தூய்மை செய்து, கமுகு வாழை முதலியவைகளை நாட்டி, நிறை குடங்கள் வைத்து, தூப தீபங்கள் ஏந்தி நாயனாரை எதிர்கொண்டார்கள். நாயனார் அடியார்களுடன் சென்று கோபுரத்தைத் தொழுது, உள்ளே புகுந்து திருமாளிகையை வலம் வந்து, திருமுன்பை அடைந்து இறை



திருநாவுக்கரசு நாயனார்

வரைக் கண்டு திருமேனி நிலத்திலே பொருந்த வீழ்ந்து வணங்கி, எழுந்து நின்று, உடம் பெங்கும் மயிர் சிலிர்க்க, அன்புக் கண்ணீர் அருவிபோற் பாய, உடல் நடுக்கங்கொள்ள, நாத்தழுதழுத்து விம்மி, "வண்டோங்கு செங்க மலம்" எனத் தொடங்கும் திருத்தாண்டகத் திருப்பதிகத்தை அருளிச் செய்து பரவினார். பின்பு வெளிப்போந்து திருமுன்றிலில் திருத் தொண்டு புரிந்தருளினார். அதன் பின்னரும் பல நாட்கள் அத் திருத்தலத்தில் எழுந் தருளியிருந்து, 'திருநேரிசை, திருவிருத்தம், திருக்குறுந்தொகை' ஆகிய எல்லாவகைத் திருப்பதிகங்களையும் அருளிச் செய்து மகிழ்ந்தார்.

அப்பால் பிற தலங்களையும் வணங்க விரும்பி, அங்கு நின்றும் புறப்பட்டு, திருப்பா சூரை யடைந்து வணங்கிப் பல திருப்பதிகங் கள், அருளிச் செய்தார். பின்பு திருவாலங் காடு வணங்கித் திருத்தாண்டகம் முதலிய வற்றைப் பாடியருளினார்.

பின்னர் வடதிசையை நோக்கி நடந் தருளி, காரிகரை வணங்கித் திருக்காளத்தியை அடைந்தருளினார். அங்குப் பொன் முகலி யாற்றில் முழுகித் திருமலையை அடிநிலைக் கண்ணே விழுந்து வணங்கி எழுந்து மேல் ஏறிச் சென்று காளத்தியப்பரை வலம் வந்து, திருமுன்பு பணிந்தெழுந்து, அன்பின் மிகுதியால் மனமுங் கண்ணும் களிப்பெய்தத் தம்மை மறந்து நின்று, "காளத்தி யான்அவன் என் கண்ணு ளானே" எனத் திருத்தாண்டகத் திருப்பதிகம் அருளிச் செய்தார். பின்பு அவ் விறைவரது அருகில் நிற்கின்ற கண்ணப்ப நாயனாரைக் கண்டு, அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கி, அன்பினால் கண்ணீர்அருவி மார்பில் பாய்ந்து ஓட, தலையில் குவித்த கை யுடன் வணங்கிப் புறத்தே வந்து அத் திருத் தலத்திலே தங்கியருளினார்.

(தொடரும்)

---

## அறநிலைய ஆட்சித்துறையின் அலுவலர், பணியாளர்கள் அளித்துள்ள தேசீயப் பாதுகாப்பு நிதியுதவி

—:o:—

(தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| சென்னை, ஆணையாளர் அலுவலகம் மூலம் | ... | 13—00 |
| தஞ்சாவூர், துணை ஆணையர் அலுவலகம் மூலம் | ... | 469—05 |
| கடலூர் உதவி ஆணையர் அலுவலகம் மூலம் | ... | 92—59 |
| சேலம், ,, ,, | ... | 194—00 |
| காஞ்சிபுரம் ,, ,, | ... | 137—00 |
| கோயம்புத்தூர் ,, ,, | ... | 108—00 |
| நாகப்பட்டினம் ,, ,, | ... | 531—67 |
| உதவி ஆணையர் அலுவலகம் கோயம்புத்தூர் | ரூ. 31 | |
| உதவி ஆணையர் அலுவலகம் நாகப்பட்டினம் | ரூ. 191 | |

—:—

மன்னார்குடி ஜெயங்கொண்டநாத சுவாமி கோயிலில் ரூ. 1050-க்கு 12 ஆண்டு 4½ % தேசீயப் பாதுகாப்புப் பத்திரங்கள் வாங்கப்பட்டன.

# உலகுரை பலவகை

## முன்னுரை

பாம்பன் குமரகுரு தாச சுவாமிகள், அண்மைக் காலத்தில் வதிந்து மறைந்த ஓர் அருட் பெருஞ் சான்றோர் ஆவர்! தகராலய ரகசியம், பரிபூரணனந்த போதம், திருப்பா, திருவலங்கல் திரட்டு, குமாரசுவாமியம் முதலிய பல அரும்பெரும் நூல்களை அவர் இயற்றி யருளி யுள்ளார். அவராற் பாடப் பெற்ற 'சண்முக கவசம்' முருகன் அடியார்களாற் பெரிதும் விரும்பிப் பாராயணம் செய்யப்பட்டு வருகின்றது.

## நெஞ்சறிவுறூஉ

இத்தகைய பல சிறப்புக்களின் மிக்க பாம்பன் சுவாமிகள் தமது நூல் ஒன்றில், 'நெஞ்சறிவுறூஉ' எனத் தம் மனத்தினை நோக்கி அறிவுரை கூறுவதாகப் பின்வரும் கருத்தமைத்துப் பாடுகின்றார்! சுவை மிகுந்த அப்பாடலின் பொருள் வருமாறு;

## பாடலின் பொருள்

"ஒரு சில மக்கள், சிறந்த பெரியவர்களைக் கண்டால், அப் பெரியவர்கள் இல்லறத்தில் இருப்பின், நம்மைப்போல இவர்கள் இல்லறத்தில் தானே இருக்கின்றனர்? என்று கூறுவார்கள்; அப் பெரியவர்கள் துறவு நெறியில் இருந்தால், எதற்காகத் துறக்க வேண்டும்? இல்லறத்திலேயே இருத்தல் ஆகாதோ? என்பார்கள்.

ஆலயங்களுக்குச் சென்று வழிபட்டால், ஞானிகளுக்கு ஆலய வழிபாடு எற்றுக்கு? மனம் தூய்மையாக இருந்தால், அதுவே போதாதா? என்பார்கள்; ஆலயங்களுக்குச் செல்லாமல் தனித்திருந்து தியான சமாதிகளில் ஈடுபட்டாலோ, ஆலய வழிபாடு செய்யாவிட்டாற் பயன் என்ன? என்பார்கள்.

சடை வளர்த்திருத்தல் அல்லது மொட்டை யடித்திருத்தல் இல்லாவிட்டால், தவவேடம் இல்லையே! என்பார்கள்; சடை வளர்த்தோ அன்றி மொட்டை யடித்தோ இருந்தால், இவை யெல்லாம் வீண் பெருமைக்கு! என்பார்கள்.

ஓரிடத்தில் இருந்து தவஞ் செய்துவந்தால், பார்த்தீர்களா! இடப்பற்று விடவில்லை என்பார்கள்; பல இடங்களுக்குச் சென்று தீர்த்த யாத்திரை செய்து தரிசித்து வந்தால், பசுவைப் போல் அலைகின்றனே! ஓரிடத்தில் இருத்தல் ஆகாதா? என்பார்கள்.

உண்டும் உடுத்தும் இருந்தால், நம்மைப் போன்றவர்தானே என்று நகையாடுவார்கள். உண்ணுமலும் உடுக்காமலும் இருந்தால், உண்டால் என்னை? உடுத்தால் என்னை? இவையெல்லாம் மூடத்தனம், அநாகரிகம்! என்பார்கள்.

சமய ஞான அனுபவக் கருத்துக்களை மக்களுக்கு விளக்குவதற்காகப் பேசினுல், பேசா அனுபூதி பிறக்க வேண்டாவோ? பேசிப் பிதற்றிக் கொண்டிருப்பது எற்றுக்கு? என்று இகழ்வார்கள்; பேசாமல் இருந்தாலோ, இவரது தவத்தாலும் ஞானத்தாலும் உலகுக்கு என்ன பயன்? பேசினுல் அன்றோ, உலகத்திற்கு உண்மை விளக்கமும் பயனும் உண்டாகும்? என்பார்கள்.

கண் திறந்து பார்த்து வந்தால், இவருக்கு உள்முக நாட்டம் இல்லை! வெளிமுக நாட்டம்தான் என்பார்கள்; கண்மூடி இருந்தாலோ, எதற்காகக் கண்ணை மூடிக்கொண்டிருக்கவேண்டும்? இறைவன் படைத்த இயற்கைப் பொருள்களின் இனிய காட்சியினைக் கண்டு இன்புறுதல் கூடாதோ? என்பார்கள்.

அற்புதங்கள் செய்யாது அடக்கமாக இருந்தால், இவருக்கு இறையருள் சிறிதும் கிட்டவில்லை என்பார்கள்; அற்புதங்கள் செய்து காட்டினுலோ, இவையெல்லாம் வித்தை—ஒருவகைச் சித்து—அவ்வளவுதான் என்பார்கள்.

ஆதலால், நெஞ்சே! உலகமக்கள் பலவாறு தத்தம் மனப்போக்கிற் கேற்பப் பேசிக் கொள்ளும்

பழித்துரை இழித்துரைகளுக்கு, நீ சிறிதும் கவலை கொள்ளாதே.

இறைவன் அருளிய பலவகைச் சன்மார்க்க நெறிகளில், எதன்கண் எனக்குப் பிடித்தமும் பயிற்சியும் உள்ளதோ, அந்நெறியையே நன்கினிது கடைப்பிடித்து ஒழுகுக! இறைவனை வழிபட்டுச் சத்திய முத்தியை அடைக!''

'அபிமானம் அறுத்தல்'

இத்தகைய சுவைமிகுந்த சிறந்த கருத்து அமைந்த பாடல், பாம்பன் சுவாமிகள் அருளிச்செய்த 'குமரகுருதாச சுவாமிகள் பாடல்' என்னும் நூலில், ''அபிமானம் அறுத்தல்'' என்னும் தலைப்பிற் காணப்படுகின்றது. அதன் முதன்மைப் பகுதி வருமாறு:

''திடப்படா துலக மாயையிற் சிக்குபு
விடப்படா தலைவோர், விரதமுள் ளோரைக்
கண்ணுறு கால்,அவர் இல்லத் திருந்திடில்,
கண்ணகல் இல்லை ஏன்?கருதினர் என்பர்!
துறவுஇருந் திடின்,ஏன் துறந்தனர்? என்பர்!
இறைஆ லயம்புக்கு இருந்து வழிபடின்,
இவர்க்குஏன் ஆலய வழிபாடு? என்பர்!
அவ்வணம்ஆற் றுவிடின் ஆற்றில்என்? என்பர்!
சடைமுண்டம் இலையேல் தவம்இன்று என்பர்!
சடைமுண்டம் உளவேல், சால்புக்கோ?
[என்பர்!
ஓர்இடத்து இருப்பின், உழிப்பற்று என்பர்!
பார்இடத்து உலாவிற் பசுஅலை என்பர்!
உண்டுடுத் திடின்,நமை ஒத்தவர் என்பர்!
உண்டுடுக் காவிடின், உளுற்றில்என்? என்பர்!
பேசி விளக்கிடிற் பிதற்றல்ஏன்? என்பர்!
பேசா திருந்திடிற் பிறர்க்குஏன்? என்பர்!
விழித்து நோக்கிடின் வெளிமுகம் என்பர்!
விழியாது இருந்திடின் விழிக்கில்என்? என்பர்!
அற்புதம் இலதேல் அருள்இன்று என்பர்!
அற்புதம் உளதேல் அணிவித்தை என்பர்!
ஆதலின் மனனே! அவனியர் பலவாறு
ஓதுஇழி வுக்குநீ உள்உலைவு ஏதும்
உறல்ஒழிந்து, எம்மான் உரைத்தசன் மார்க்க
முறையில் உனக்குஎது பிடித்தமும் முயல்வும்
உள்ளதோ, அவ்வாறு உற்றுஎம் கடவுளாய்
உள்ள குகேசனை உலப்பில் உண்மையை...
உருஅரு இன்றி ஒளியிருள் இன்றிச்
சுத்தசித் தாகச் சூழ்ந்து,
சத்திய முத்தி தான்அடை வாயே!''



மணிவாசகர்

மாணிக்கவாசகர்

இங்ஙனம் ஞானிகள் குறித்தும் உலகுரைகள் பலவகையாக நிகழ்தல் பற்றி மாணிக்கவாசகரும் கூட, தாம் அருளிய திருவாசகத்தில் ஆங்காங்கே குறிப்பிட் டிருக்கின்றார்:

''நாடவர் பழித்துரை பூணது வாக''
''நாட்டார் நகை செய்ய
நாம்மேலை வீடுஎய்த''

''நாடவர் நந்தம்மை
ஆர்ப்ப ஆர்ப்ப
நாமும் அவர்தம்மை
ஆர்ப்ப ஆர்ப்ப''

"பித்தன் என்றெனை உலகவர்
பகர்வதோர் காரணம் இதுகேளீர்"

எனப் பல திருமொழிகள், திருவாசகத்தில் வருதல் காணலாம்.

**திருச்சதகம்**

மேலும் திருவாசகத்தில் திருச்சதகம் என்னும் பகுதியில்,

"உத்தமன் அத்தன் உடையான்
அடியே நினைந்துருகி
மத்த மனத்தொடும் மால்இவன்
என்ன, மனநினைவில்
ஒத்தன ஒத்தன சொல்லிட,
ஊரூர் திரிந்துஎவரும்
தத்தம் மனத்தன பேச,
எஞ்ஞான்றுகொல் சாவதுவே?"

என மாணிக்கவாசகர் பாடியிருத்தலும் ஈண்டு அறிதற்குரியது. 'மத்த மனத்தொடும் மால்இவன்' என உரைத்தல்; 'மனநினைவில் ஒத்தன ஒத்தன சொல்லிடல்; 'எவரும் தத்தம் மனத்தன பேசல்' என உலகுரை பலவகைகளையும், இத்திருப்பாடல் சுட்டி யிருத்தல் காண்க.

"அண்டர் நாயகனுர் என்னை
அறிவரேல், அறியா வாய்மை
எண்டிசை மாக்க ளுக்கு
யான்எவ் வுருவாய் என்?"

என்றதற்கேற்ப, 'இறைவனின் திருவுள்ளம் உவக்கும்படி நன்னெறி கடைப்பிடித்து ஒழுகுவோர், உலக மக்கள் கூறும் பலவகைப் பழித்துரைகளைப் பொருட்படுத்த வேண்டுவதில்லை' என்பது கருத்து.

**தற்போதம் கெடுதல்**

நம்மைப் பற்றிப் பிறர் என் நினைக்கின்ருர்? யாது கூறுகின்ருர்? என்று அறிய முயன்று அலமரும் தற்போதவுணர்வுகெட்டு, இறையருளுணர்வில் திளைத்து இன்புறும் பேற்றினை விரும்பியே, "எஞ்ஞான்றுகொல் சாவதுவே?" என மாணிக்கவாசகர் ஆராமையுடன் வினவுகின்ருர்.

**முடிவுரை**

'ஞானிகளின் ஞானுனுபவம் என்றும் எங்கும் ஒருபடித்தாகவே இயைந்து காணப்படும்' என்னும் உண்மையினை, இவ்வாற்ருல் நாம் இனிது உணரலாம்.

---

## நடைபெறுகின்ற நிகழ்ச்சிகள்

—: ☀ :—

ஸ்ரீ வடபழநி ஆண்டவர் கோயிலில் பங்குனி உத்திர லட்சார்ச்சனை விழா.

**குறிச்சி:**—ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலில் ஸ்ரீராமநவமி உற்சவம்.

**பறம்பக்குடி:**— ஸ்ரீ முத்தாலபரமேஸ்வரி அம்மன் கோயிலில் திருவிழா.

**பந்தணைநல்லூர்:**—ஸ்ரீ பசுபதீஸ்வரர் கோவிலில் பங்குனி உத்திரம்.

**குடியாத்தம்:**—சந்தைப்பேட்டையில் ஸ்ரீ சீதா ராமாஞ்சநேய சுவாமி கோயிலில் ஸ்ரீராமநவமி பிரம்மோற்சவம்.

**சென்னை, சிந்தாதிரிப்பேட்டை:**—ஸ்ரீ ஆதிகேசவப்பெருமாள் கோயிலில் பிரம்மோற்சவம்.

**திருப்பாண்டிக் கொடுமுடி:**—ஸ்ரீ மாரியம்மன் இரதோற்சவம்.

**திருவானைக்கா:**—ஸ்ரீ ஜம்புகேசுவர சுவாமி கோயிலில் பிரம்மோற்சவம் 21-3-63 முதல் 14—4—63 வரை.

**திருப்பழுவூர்:**—ஸ்ரீ ஆலந்துறையார் கோயிலில் பங்குனி உத்திரப் பிரம்மோற்சவம்.

**திருவாரூர்:**—ஸ்ரீ தியாகராஜ சுவாமி கோயிலில் பங்குனி உத்திரப் பிரம்மோற்சவம்.

**பெரியூர்:**—ஸ்ரீ பெரியூர் மாகாளியம்மன் கோயிலில் குண்டம், இரதோற்சவம்.

**திருநகரி:**—ஸ்ரீ கல்யாண அரங்கநாத சுவாமி கோயிலில் பிரம்மோற்சவம்.

**தொட்டியம்:**— மதுரைக் காளியம்மன் கோயிலில் இரதோற்சவம்.

**மதுராந்தம்:**—ஸ்ரீ கோதண்டராம சுவாமி கோயிலில் ஸ்ரீராம நவமி உற்சவம்.

# சேக்கிழாரும் முருகனும்



சேக்கிழார்

## குன்றத்தூர்

சேக்கிழார் சுவாமிகள் தொண்டைநாட்டில், புலியூர்க் கோட்டத்தில், குன்றத்தூரில் தோன்றி யருளியவர். குன்றத்தைச் சார்ந்த ஊர்கள் பல தமிழ் நாட்டில் உள்ளனவாயினும், 'குன்றத்தூர்' என்னும் காரணச் சிறப்புப் பெயராற் சிறந்து திகழ்வது, இஃதொன்றேயாகும்.

"பாலாறு வளஞ்சுரந்து நல்க மல்கும்
பாளைவிரி மணங்கமழ்பூஞ் சோலை தோறும்
காலாறு கோலிஇசை பாட நீடும்
களிமயில்நின் றாடுமியல் தொண்டை நாட்டுள்
நாலாறு கோட்டத்துப் புலியூர்க் கோட்டம்
நன்றிபுனை குன்றைவள நாட்டு மிக்க
சேலாறு கின்றவயற் குன்றத்தூர்..."

எனத் திருத்தொண்டர் புராண வரலாற்றில், ஆசிரியர் உமாபதிசிவம் குன்றத்தூரின் சிறப்பினை நன்கெடுத்துப் பாடியுள்ளார்!

## வளநாடு

சேக்கிழார் சுவாமிகள் தோன்றியருளிய காரணத்தால் இதற்கு ஒரு தனிப் பெருமை ஏற்பட்டுள்ளது என்பது உண்மையே எனினும், அதற்கு முன்பும் இவ்வூருக்கு ஒரு பெருமை இருந்திருத்தல் வேண்டும்! அதனாலேயே "குன்றத்தூர் வளநாடு" எனப் பண்டைக் கல்வெட்டுக்களிலும் இது குறிக்கப் பெற்றுள்ளது.

## குன்றமும் குமரனும்

ஊருக்குப் பெயர் குன்றத்தால் ஏற்பட்டதுபோல, குன்றத்திற்குப் பெருமை, அதன் மீது எழுந்தருளி விளங்கும் முருகனால் அமைந்தது என்பதில் ஐயமில்லை. இங்குள்ள முருகன் கோயில் மிகவும் தொன்மை வாய்ந்தது! குன்றின்மீது கோயில் கொண்டுள்ள முருகனின் திருவுருவம் மிகவும் கம்பீரமும் அழகும் கவர்ச்சியும் உடையதாகத் திகழ்கின்றது!

குன்றத்திற்கும் கோயிலுக்கும் மிக அணித்தாகவே சேக்கிழார் சுவாமிகள் தோன்றியருளிய இல்லம் இருக்கின்றது. அஃது இப்போது சேக்கிழார் சுவாமிகளின் கோயிலாக அமைக்கப்பெற்றுத் திகழ்கின்றது! சேக்கிழார் சுவாமிகள் தம் இளமைப் பருவத்தில், இக்குன்றத்தின் சூழலில் ஓடியாடி வளர்ந்திருத்தல் வேண்டும். அவர் தம் அருமைத் திருவடிகள் இங்கெல்லாம் பட்டுப் பதிந்து நடந்திருக்கும். இம் மலைமீது அவர் பலகாலும் ஏறியிருப்பர்! இங்குள்ள முருகப் பெருமானை நாடோறும் அவர் வழிபட்டு மகிழ்ந்திருப்பர்! நாம் சேக்கிழார் சுவாமிகளைக் காணும் பேறு பெறுவிட்டாலும், அவர் பழகிப் பயின்ற குன்றத்தின் சூழல்களையும், அவர் வழிபட்டு மகிழ்ந்த முருகனையும் காணும் பேறு பெற்று இருக்கின்றோம்!

### கவிஞர்களும் வாழ்க்கையும்

கவிஞர்களின் வாழ்க்கை யனுபவங்கள், நிகழ்ச்சிகள், அவற்றின் விளைவாக எய்திய பலவகை மன நிலைகள், உணர்ச்சித்திறங்கள் ஆகியவை, அவர்கள் இயற்றும் கவிதைகளிலும் காப்பியங்களிலும் நிழலாடித் திகழ்ந்து வெளிப்படும். ஒரு கலைஞனின் வாழ்க்கை அவனைப்பற்றிய வரலாற்று நூலில் அன்றி, அவன் படைத்தளித்த கலைப்பொருள்களிலேயே அழியாமல் விளங்குகின்றது என்பர். (The life of an artist survives not in his biography, but in the products of his art). இவ்வுண்மையினை விளக்கப் பலப்பல சான்றுகள் எடுத்துக் காட்டலாம்.

### கவிஞரின் அனுபவங்கள்

ஷேக்ஸ்பியர் தம்முடைய பதினெட்டாம் வயதில், தம்மினும் எட்டு வயது மூத்த ஆன் ஆத்தவே (Anne Hathaway) என்னும் ஓர் அம்மையாரை மணந்தார். அதன் விளைவாகவே, அவர் தாம் பிற்காலத்தில் இயற்றிய பன்னிரண்டாம் இரவு (The Twelfth Night) என்னும் நாடக நூல் ஒன்றில், "ஓர் இளைஞன் தன்னினும் வயதிற் குறைந்த ஒரு பெண்ணையே மணந்துகொள்ளுதல் நல்லது"* என்னும் கருத்து அமைய,

*"Let thy love be younger than thyself,
Or thy affection cannot hold the bent;
For women are roses, whose fair flower,
Being once display'd, doth fall that very hour..."
—The Twelfth-Night.

எனக் குறிப்பிட்டிருப்பதாக அறிஞர்கள் கூறுவர். கவிஞர்களின் வாழ்க்கை அனுபவங்கள், அவர்களின் கவிதைகளில் இயல்பாகத் தாமே வெளிப்பட்டுவிடும் என்பதற்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டு இது!

### வாழ்க்கையே கவிதை

மேலும், ஷேக்ஸ்பியர் தம் இறுதிக் காலத்தில் தம்முடைய வாழ்க்கையையே உள்ளுறை பொருளாக அமைத்துப் புயல் (The Tempest) என்னும் நாடகத்தை இயற்றினார் எனவும் அறிஞர்கள் (Prof. Dowden and others) கூறுவதுண்டு. "புயல்" என்னும் நாடகத்திற் போதரும் பிராஸ்பரோ (Prospero) என்னும் அரசன், ஷேக்ஸ்பியரையும்; நாடு கடத்தப்பெற்று அவன் தனித்து வாழ்ந்து வந்த தீவு, (The Enchanted Island) ஷேக்ஸ்பியர் கால நாடக மேடை யுலகத்தையும்; ஏரியல் (Ariel) என்னும் ஏவலன், ஷேக்ஸ்பியரின் கற்பனைத் திறனையும்; பிராஸ்பரோவின் அருமைப் புதல்வியாகிய மிராண்டா (Miranda) இளவரசி, ஷேக்ஸ்பியர் இயற்றிய அற்புதம்மிக்க நாடக நூல்களையும்; ஃபெர்டினண்ட் (Ferdinand) இளவரசன், ஷேக்ஸ்பியரின் அன்பைப்பெற்று விளங்கிய ஃப்ளெட்சர் (Fletcher) என்னும் இளங்கவிஞரையும்; அலான்ஸோ அண்டோனியோ செபாஸ்டியன் என்பவர்கள், ஷேக்ஸ்பியர் காலத்தில் வாழ்ந்து அவர்பால் மனத்தாங்கல் கொண்டிருந்த பிற எழுத்தாளர்களையும்; காலிபன் (Caliban) என்பவன், ஷேக்ஸ்பியர் காலத்தில் நாடகம் காணும் பண்பற்ற மக்கட் கூட்டத்தினையும் (Crude Audience) குறித்து நிற்பதாக, மேலை நாட்டு இலக்கிய ஆராய்ச்சியாளர் கூறுவர்.

### கவிஞர்கள் பழகிய சூழல்கள்

இம் முறையினை ஒட்டி நாம் சேக்கிழாரையும் முருகனையும் தொடர்புறுத்திச் சிறிது ஆராய்தல் ஈண்டைக்குப் பொருத்தம் ஆகும்! ஷேக்ஸ்பியர் தம் இளமைக் காலத்தில் தம் ஊரின் (Stratford-on-Avon) சுற்றுப் புறத்தினை (Warwickshire)ச் சூழ்ந்திருந்த காடு மலை ஆறு வயல்வெளி ஆகிய பகுதிகளிற் சுற்றி அலைந்து திரிந்து கண்ட அனுபவங்கொண்டே, நீங்கள் விரும்புவது போலவே (As You Like It) என்னும் நாடகத்தில் வரும் ஆர்டன்காடு (The Forest of Arden) பற்றிய கற்பனையை அமைத்தார்! மேரி ஆர்டன் (Mary Arden) என்னும் தமது தாயின் பெயரை நினைவுகூரும் வகையிலேயே தாம் கற்பனை புரிந்த காட்டிற்குப் பெயரிட்டு வழங்கினர்!

விவிலிய நூலில் ஆதாம் ஏவாள் (Adam and Eve) என்பவர்கள் வாழ்ந்திருந்ததாகக் கூறப்படும் ஈடன் (Eden) என்னும் தோட்டத்தின் பெயர்ச் சாயல் தோன்றும் படி, தம் நாடகக் கதையில் வரும் காட்டின் பெயரைச் சொல்லொப்புமை பொருந்த

ஆர்டன் (Arden) எனக் குறிப்பிட்டு ஷேக்ஸ்பியர் வழங்கியிருத்தலும் அறிந்து மகிழ்தற்குரியது.

(Shakespeare valued the name because it was that of his mother Mary Arden, and of the forest country of Warwickshire in and around which his family had been seated for many generations).

இங்ஙனமே ஆலிவர் கோல்டு ஸ்மித் என்னும் ஆங்கிலக் கவிஞர், தாம் இளமைக் காலத்தில் வதிந்திருந்த லிஸ்ஸாய் (Lissoy) என்னும் தம் சிற்றூரையே, பிற்காலத்தில் தாம் பாடிய பாழ்பட்ட கிராமம் (The Deserted Village) என்னும் கவிதை நூலில், இனிய ஆபர்ண் (The sweet Auburn) எனக் குறிப்பிட்டுப் புகழ்ந்து போற்றியுள்ளார்!

### இளமை நிகழ்ச்சிகளின் பசுமை நினைவு

இவ்வாறே, இக் குன்றத்தூரில் திருவவதாரம் செய்தருளிய சேக்கிழார் பெருமான், பிற்காலத்திற் சோழப் பேரரசன் ஆகிய இரண்டாம் குலோத்துங்கனின் (கி. பி. 1128—1148) முதலமைச்சராகச் சிறந்து திகழ்ந்தனராயினும், தாம் பிறந்தருளிய குன்றத்தூரையும், அவ்வூர்க்கண் உள்ள குன்றத்தினையும், அதன் கண் எழுந்தருளி விளங்கும் முருகப் பெருமானையும் சிறிதும் மறந்திலர்! தம் இளமைக் காலத்தில் குன்றத்தூர்க் குன்றின்மீது ஏறி ஓடி ஆடி விளையாடிய நிகழ்ச்சிகளும், அக்குன்றின்மீது அமர்ந்து விளங்கும் முருகப்பெருமானை அவ்வப்போது வழிபட்டு மகிழ்ந்த திறங்களும், அவர் திருவுளத்திற் பசுமையாகப் படிந்திருந்தன!

### மறந்திலாத மாண்பு

சேக்கிழார் தாம் பிறந்தருளிய நாட்டிலும் ஊரிலும் பெரிதும் ஈடுபாடு வாய்ந்தவர்! அவர் தாம் பிறந்தருளிய குன்றத்தூரினைச் சிறிதும் மறந்திலர் என்பதனை, அவர் சோழப் பேரரசின் முதலமைச்சராக விளங்கியபோது குன்றத்தூரில் எடுப்பித்து மகிழ்ந்த வடதிருநாகேச்சுரம் என்னும் கோயில் இனிது உணர்த்தும். தாம் தோன்றியருளிய தொண்டை நாட்டின்மீது சேக்கிழார் எத்துணைப்பற்று மிக்கவராக விளங்கினர் என்பதனை, பெரிய புராணத்தில் வரும் திருக்குறிப்புத் தொண்ட நாயனர் வரலாற்றுப் பாடல்கள் தெற்றெனவிளக்கும். பிறந்த நாட்டையும் ஊரையும் மறந்திலாத சேக்கிழார் பெருமான், அங்குத் தம் இளமையில் வழிபட்டு மகிழ்ந்த முருகனை மறந்திருத்தல் ஒல்லுமோ?

(தொடரும்)

---

## செய்திச் சுருக்கம்

—:✱:—

குன்றத்தூர் முருகன் கோயில் திருமலைப் பாதைத் திறப்புவிழா, சிவராத்திரித் திருநாளில் (22—2—63) மிகவும் சிறப்புற நிகழ்ந்தது. திருப்பணிக் குழுத் தலைவர் மணலி திரு. S. இராமகிருஷ்ண முதலியார், B. A., அவர்கள் வரவேற்புரை வழங்கினார்கள். தருமை ஆதீனம் வித்துவான் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தரத் தம்பிரான் அவர்கள் தலைமை தாங்கினார்கள். நமது அறநிலைய அமைச்சர் திருமிகு. M. பக்தவத்சலம், B.A., B.L., அவர்கள் திருமலைப் பாதையைத் திறந்து வைத்தார்கள். செங்கற்பட்டு மாவட்டக் கலெக்டர் அவர்கள் விழாவிற் கலந்து கொண்டு பேசிச் சிறப்பித்தார்கள். திரு. ந. ரா. முருகவேள் M. A., M. O. L., அவர்கள் "சேக்கிழாரும் முருகனும்" என்பது பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள். திருப்பணிக் குழுச் செயலாளர் திரு. K. S. குப்புசாமி முதலியார் திருப்பணிச் செயல்கள் பற்றி விளக்கினார்கள். குன்றத்தூர் வட்டப் பஞ்சாயத்து யூனியன் தலைவர் திரு. M. P. கந்தசாமி முதலியார் அவர்கள் நன்றியுரை நவின்றார்கள்.

சென்னை இராயப்பேட்டை லே. அவுட் காண்ட்ராக்டரும், பாம்பன் சுவாமி சீடரும் ஆகிய சைவத் திரு C. மாசிலாமணி முதலியார் அவர்கள், தம் செலவில் திருமலைப் பாதையை அமைத்துக் கொடுத்தார்கள். இவ் விழா சிறப்புற நிகழ்தற்கு நெல்லைப் பரசமயக் கோளரிநாதர் ஆதீனம் பாரதீசுவரர் ஜெகத்குரு ஸ்ரீமத் சிவானந்த முனீசுவரர் பெரிதும் ஆக்கமும் ஊக்கமும் கொடுத்தருளினார்கள். விழாவுக்குப் பெருந்திரளான மக்கள் கூடியிருந்து சிறப்பித்தார்கள்.

# சிவஞானபோதம்

[திரு. க. வச்சிரவேல் முதலியார், B A , L.T., காஞ்சிபுரம்]



மெய்கண்டார்

(முன் இதழ்த் தொடர்ச்சி)

## ஆறும் சூத்திரம்: மூன்றும் அதிகரணம்

**சூத்திரப்பகுதி:**—''இருதிறன் அல்லது சிவசத்தாமென இரண்டு வகையின் இசைக்கும்மன் னுலகே,''

**வார்த்திகம்:**—''இனி இவ்விரண்டு தன்மையும் இன்றி வாக்கு மனதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம் என்று உணரற்பாற்று, பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவதின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசமின்மையானும்''

**விளக்கம்:**—முன் அதிகரணங்களில் உயிர்க்குயிராயுள்ள முதற்பொருள் அளவையறிவால் அறியப்படுவதும் அன்று, ஒருவாற்ருனும் அறியப்படாத சூனியமும் அன்று என்பது விளக்கப்பட்டது. அங்ஙனமாயின் அதன் உண்மைநிலை யாதோ என்பார்க்கு இங்கு விடை கூறப்படுகிறது. முதற்பொருள் வாக்கு மனங்களைக் கடந்ததும், அதன் அருளாற்றல் வயப்பட்டு நின்று உணரும் மெய்யுணர்வுக்கு விடயமாவதும் ஆய சிவசத்து என்பதே விடை.

இங்கு வாக்கு என்னும் சொல் நாதத்தைக் குறிக்கும்; குறித்தலின், நாதம் இறுதியாக எண்ணப்படும் பாசங்களால் விளங்கும் அறிவாகிய பாசஅறிவை உணர்த்துகின்றது; மனம் என்றது அதற்கு வேருகிய பசு அறிவைக் குறிக்கும். கோசரம் என்னும் சொற்குப் பொருள் விடயம், விளங்குவது.

வாக்கு மனதீதம் என்றால் அமையாதோ, கோசரம் எனவும் கூறவேண்டுமோ? வேண்டும் எனின், கோசரம் என்றதே அமையாதோ, அதீதம் எனக் கூறவேண்டுமோ?—என வினுக்கள் எழும்:

வார்த்திகத்தில் உள்ள ஏது இவ்வினுக்களுக்கு விடையைக் குறிப்பிக்கின்றது. மெய்ப்பொருளை உணர்தற்கு மெய்ந்நூல்கள் பல தனிப்பட்ட சாதனங்களை விதிக்கின்றன; அவை உலகப் பொருள்களை அறிந்து பெறுதற்குரிய சாதனங்களின் வேருக உள்ளன. முதற்பொருள் வாக்குமனத்திற்குக் கோசரம் ஆம் எனின், அத்தகைய தனிப்பட்ட சாதனங்கள் வேண்டா; இனி, எவ்வாற்ருனும் உணரப்படாத அதீதப் பொருளே எனின், சாதனங்களைச் செய்தும் பயன் விளையப் போவதில்லை. ஆதலால் மேற்கூறியபடி பாசபசு அறிவுகளுக்கு அப்பாற்பட்டுத் திருவருளான் ஒற்றுமைப்பட்டு உணரும் மெய்யுணர்விற்கு விளங்குவதா யுள்ளதே முதற்பொருள் என மேற்கொள்ளப்பட்டது. பிரகாசம்—அளவையறிவுக்கு விடயமாவது; அப்பிரகாசம்—விடயமாகாதது.

'வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே' என்னும் தொடரில் அதுவே என்றது "அதுநீ" (தத்வமஸி) என்னும் ஒரு வார்த்தையுள் வரும் வாய்பாடுபற்றிக் கூறியது. முதற்பொருள் நம் சுட்டறிவுகொண்டு இன்னது என எட்டியும் சுட்டியும் கூறப் படாதது என்னுங் கருத்தால், வேதங்கள் அதனை 'அஃது' எனக் குறித்தன. "ஆர் அறிவார் அவர் பெற்றியே", "எந்தையாரவர் எவ் வகையார் கொலோ" என்றாற்போல ஆளுடைய பிள்ளையாரும், "அவன் அருளே கண்ணாகக் காணின் அல்லால் இப்படியன் இந்நிறத்தன் இவ் வண்ணத்தன் இவனிறைவன் என்றெழுதிக் காட் டொணாதே" எனத் திருநாவுக்கரசரும், "இன்ன தன்மையன் என்றறியொண்ணா எம்மானை" என நம்பி ஆரூரரும் அருளிச் செய்தமை குறிக் கொளத்தக்கது.

1. தன்னாற் கூறப்படும் பொருள்: சாந் தோக்கியம் முதலிய உபநிடதங்களில் "சத்து" எனக் குறிக்கப்படும் மெய்ப் பொருள் பாச அறிவுக்கும் பசு அறிவுக்கும் அப்பாற்பட்டுத் திருவருளுணர்விற்கு விளங் குவதாக வுள்ளது; அது சுவேதாசுவதரம் முதலியவற்றினும் திருமுறைகளினும் எடுத் தோதப்படும் சிவம் என உணரத்தக்கது.

2. ஐயப்பாடு: அது ஆதிசங்கரர் முதலாயினார் பிரமாணாதீதம் எனக் கூறிவரும் அநிர்வசனப் பொருளோ (சொல்லொணா ததோ), திருவாதவூரடிகள் முதலாயினார் "ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன் பமே! என்னுடையன்பே!" என அனு பவித்து எடுத்துரைத்தற்குக் காரணமாக வுள்ள சிவ மெய்ப்பொருளோ என்றாற் போலப் பலதலைப்பட உண்டாகும் உணர்வு.

3. பிறர் கூறும் பக்கமும் மறுப்பும்:

(அ) மாயாவாதி கூற்று: பொருள் ஒன்றே. அஃது அவிச்சை வயத்தான் ஞாதா (அறிபவன்) எனவும் ஞேயம் (அறியப்படும் பொருள்) எனவும், பகுக்கப்பட்டு மெய்ந் நூல்களுட் கூறப்படும் சாதனங்களினின்று அறியவும்படும். அவிச்சை நீங்கியபோது அறிபவன், அறிவு, அறியப்படுவது எனப் பாகுபாடு செய்தல் இன்மையின், கேவலம் ஞானமாத்திரையாய் நிற்பதெனப்படும். ஆகலின், முதற்பொருளை வாக்குமனாதீதம் என்றல் பொருந்தும்; கோசரமாம் என்றல் பொருந்தாது.

மறுப்பு: பரமார்த்தம் (பரம்பொருள்) எனப்படும் முதல்வனைப் பிறப்பு நிலையிற் கருதப்படும் சத்தும் அன்று, அசத்தும் அன்று, சொல்லொணாதது எனின், அங்ஙனம் ஒரு பொருள் உண்டென்பது எப்பிரமாணத் தால் உணரப்படும்? காட்சி, அனுமானம், ஆகமம் என்பவற்றுள் ஒன்றான் உணரப் படும் எனின், அஃது அறியப்படு பொருளாகி விடுகிறதே என்று அஞ்சி, நின் அடிப்படை முடிவை மாற்றிக்கொள்ள மனமில்லாமல், அப்பிரமேயம் (பிரமாணத்தால் அறியப் படாதது) எனக் கூறுகின்றாய். சத்தைத் தலைப்பட்டுணர்ந்த பெரியோன் ஆய்ந்து துணியின், பிரமாணங்களால் அறியப்பட்ட பொருளும், எவ்வாறானும் அறியப்படாத பொருளும் (இரண்டும்) அசத்தே ஆம். ஒன்று நிலைமாறுவது, மற்றொன்று நமக்குப் பயன்படாதது. ஆதலால், அறிவினால் அறியப் படாத மெய் எனக் கூறப்பட்டுச் சாந்தோக்கியம் முதலியவற்றில் சத்து என்னும் சொல் லால் குறிக்கப்பட்ட முதற்பொருளைச் சைவ நாயன்மாரும், சுவேதாசுவதரம் முதலிய சைவ உபநிடதங்களும் கூறிவரும் சிவன் திருவருள் எனக்கொள். அஃது ஒற்றுமைப்பட்டு நின்று உணரும் சிவ ஞானத்திற்கு விளங்கிப் பேரின்ப மயமாய் நிலையுறுவது என்பது நாயன்மார் வாய்மொழிகளினும், சைவ உப நிடதங்களினும் கூறப்படும் உண்மையாகும்.

எண்ணிய சத்தன்(று) அசத்தன்றும் என்றால்,என்
கண்ணி உளதென்றல்? மெய்கண்டான்—எண்ணி
அறிய இரண்டாம் அசத்து;ஆதல் சத்தாம்
அறிவறியா மெய்சிவன்றாள் ஆம்.

"மெய்கண்டான் எண்ணியறிய இரண் டும் அசத்தாதலால், சத்து ஆம், அறிவறியா மெய் சிவன்தாள் ஆம்" என உரைநடை செய்துகொள்க.

"ஏதுக்களாலும் எடுத்தமொழி யாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா; சுடர்விட்டுளன்
எங்கள்சோதி"

என்னும் திருஞானசம்பந்தர் திருப்பாசுரமும்,

மன்னும் "ஏதுக்க ளால்" எனும் வாய்மைதான்
தன்ன தொப்புவே றின்மையிற் சங்கரன்
இன்ன தன்மையை ஏது எடுத்துக்காட்(டு)
அன்ன வற்றால் அளப்பிலன் என்றதாம்;

தோன்று காட்சி "சுடர்விட்டுளன்"
ஆன்ற அங்கிப் புறத்தொளியாய் அன்பின்
ஊன்ற உள்ளெழும் சோதியாய் நின்றனன்
ஏன்று காண்பார்க் கிதுபொருள் என்றதாம்

என்னும் அதன் வார்த்திகமும் ஈண்டுச் சிந்தித்தற்குரியவை.

(ஆ) நையாயிகர் கூற்று:—

மனம் முதலிய கருவிகளோடு கூடாதபோது உயிர்க்கு உணர்வு நிகழாது; ஆதலால் வாக்குமனங்களைக் கடந்த நிலையில் முதற்பொருள் விடயமாகும் என்பது எவ்வாறு பொருந்தும்? அனுமான அளவையானும் ஆகம வளவையானும் முதல்வன் உணரப்படுவன் என்றலே பொருத்தமுடைத்து.

மறுப்பு:—ஓர் ஊருக்குச் செல்வோன் அவ்வூரின் இயல்பை ஆண்டுச் சென்றுவந்தோர் கூறக்கேட்டு அறியலாம்; வழிகாட்டி முதலியவற்றைப் படித்தும் செல்வழியையும் பிற விவரங்களையும் அறியலாம்: ஆயினும், இவ்வறிவினால் மட்டும் ஒருவன் அவ்வூரை நேரிற்சென்று கண்டவன் ஆகிவிடான்; கேட்டதனால் ஊரின் இருப்புப்பற்றிய பொதுவறிவுதான் உண்டாகும்; நேரிற் சென்று கண்டறியும் சிறப்பறிவு உண்டாகாது. அதுபோன்றுதான் கடவுளை நூல்கள் வாயிலாகக் கேட்டு உய்த்தறியும் அறிவு; அதனைத் தலைப்பட்டுணர்ந்தார்க்கே இன்பம் இடையறாது ஈண்டுதலும் பிறப்பின் நீக்கமும் உளவாகும்.

பிறப்புநிலையில் உயிர்க்கு உணர்வை விளக்குவனவாய் அமைந்துள்ள தனு கரண புவன போகங்கள் அசத்தாதலின், அவை அசத்துப் பொருள்களைக் காட்டி நிற்பனவே யன்றி, அவற்றுள் ஒன்றும் ஒப்பற்ற முதற்பொருளைக் காட்டமாட்டாது; அவற்றான் அறிந்துவரும் நீ தானும் முதற்பொருளை உணரமாட்டாய். உணர்வாய் எனின், ஏனைப்பொருள்கள் போல முதற்பொருளும் உனக்கு வேறாக நிற்பதாதல்வேண்டும். ஆனால், முதற்பொருளோ நின் உணர்வுக்கு முதலாய் உள்நின்று உன்னை உணர்த்தி வருவது. ஆன்மாவிற்கு உணர்வு விளங்கும் உண்மையை உணர்ந்தோன் சத்தாயுள்ள சிவத்தைக் காணுங்கால் தன்னறிவு அதன் கண் அடங்கி அதுவாய்நின்று, அதனானே அதனை அறிவன்; ஞாயிற்றை விளக்கொளி கொண்டு காணாது, ஒளியைக்கொண்டே கண்டு வருதல்போல. எனவே, அவன் முதற்பொருளைத் தலைப்பட்டுணரும் நிலையில் அதனின் வேறாய் நின்று உணரான்; ஒற்றுமைப்பட்டு நின்றே உணர்வன் எனக் கொள்க. இவ்வாறு உணரும் உணர்வு பாச அறிவும் அன்று, பசுவறிவும் அன்று. அவற்றின் வேறு.

உணர்ப அசத்தாதல் ஒன்றுணரா(து) ஒன்றை;
உணரும்நீ தான்உணராய்; ஆயின்—உணரும் [உனில்
தான்இரண்டாய்: மெய்கண்டான் தன்னால் [உணர்தலால்
தானிரண்டாய்க் காணுன் தமி.

உணர்ப—உணர்தற்குக் கருவியாயுள்ளவை; ஒன்றை (அவற்றுள்) ஒன்றும் உணராது—என முற்றும்மை வருவிக்க தமியைத்தான் இரண்டாய்க் காணான்—என இரண்டன் உருபு விரிக்க.

(இ) பாதஞ்சலர் கூற்று: —

தன்னால் அறிதல் என்றது தன்னைப் பற்றுதல் (ஆன்மாச்சிரயம்) என்னுங் குற்றமாம். அஃதாவது, கொக்கைப் பற்ற வேண்டுவாரை அதன் தலையில் வெண்ணெயை வைத்துப் பின் அஃது உருகிய வழி பற்றுக என்றாற் போல்வது. முதல்வனை உணர்ந்தபின் அன்றோ முதல்வனால் உணர்தல் கூடும்? முதல்வனைக் காண்டற்குக் கூறப்படும் உபாயம் (முதல்வனாற் காண்டல்), முதல்வனைக் காணுதலையே தனக்கு ஆதாரமாகப்பற்றி நிற்கின்றது. ஆதலால், வாக்குமனாதீதமாய் நின்ற முதற்பொருள் யோகநூல்களுட் கூறப்படும் தியானபாவனைகளிற் கோசரமாம் என்றல் பொருத்தமுடைத்து. தன்னால் அறிவன் என்றமை பொருந்தாது.

மறுப்பு:—யோக நூலுட் கூறும் பாவனை பின்வரும் நான்கு வகையுள் ஒன்றாக அமைதல் வேண்டும்: (i) மனம் முதலிய கருவிகளோடு கூடிநின்று பாவிப்பது, அல்லது, (ii) அவற்றோடு கூடாதுநின்று பாவிப்பது, அல்லது, (iii) இரண்டுமின்றிப் பாவிப்பது, அல்லது (iv) பசித்தவன்தான் உணவை உட்கொண்டு விட்டதாகப் பாவித்தல்போல, உணரப்படாத பொருளை உணர்ந்ததாக வைத்துப் பாவகம் செய்வது

முதல் வகையைச் சேர்ந்ததாயின் அதற்கு விடயமாகும் பொருள் அசத்தாம் என்பது மேலே காட்டப்பட்டது. இரண்டாம் வகையில் உணர்வே நிகழாமையின் முதற்பொருள் விடயமாம் என்றல் வெறுங் கூற்றேயாம்; மூன்றாவது வகை பேச்சிற்காகக் கற்பித்துக் கூறப்பட்டதன்றி அப்படி ஒரு பாவனை யாண்டும் இல்லை. நான்காவது வகையில், உணவு கொள்ளாது உண்டதாகப் பாவிப்பார்க்குப் பசிப்பிணி நீங்காதவாறு போல, முதற்பொருளைக் காண்டலின்மையின் அது பயனற்றது. பின்னர் என்னையோ உண்மை முடிபு எனின், தன்னருளாற் பாவிப்பது பரம்; அதனை வெறும் பாழ் என்று கொள்ளற்க! விளக்கொளியால் விளக்காகிய சுடரைக் காண்கின்றோம். முன்னர் ஒளியைப்பற்றிப் பின் ஒளிக்கு முதலாகவுள்ள சுடரைக் காண்கின்றோம். அது போல மேலே தன்னால் உணர்தல் என்றதற்கு முதல்வனது குணமாகவுள்ள அருளால் உணர்தல் என்பதே கருத்தாகலின், ஆண்டுத் தன்னைப் பற்றுதல் என்னும் குற்றம் இல்லை என்பதை உணர்ந்துகொள். தன்னருளை அறிதலும் அதனாற் பாவித்தலும் பின்னர் விளங்கும்.

பாவகமேல் தானசத்தாம்; பாவனா தீதம்எனின்
பாவகமாம்: அன்றென்னிற் பாழதுவாம்—
[பாவகத்தைப்
பாவித்தல் தானென்னின் பாவகமாம்: தன்னரு
பாவிப்பது பரம்இல் பாழ். [ளால்

# நாலாயிரத் திவ்வியப் பிரபந்த நூல் வெளியீடு:

சென்னை ஸ்ரீ சென்ன கேசவப் பெருமாள் கோயிலில் 20—3—63 புதன் கிழமையன்று மாலை, காலஞ் சென்ற திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் B. A. B. L. என்னும் **மயிலை மாதவதாசன்** அவர்கள் பதிப்பித்த நாலாயிரத் திவ்வியப் பிரபந்த நூலின் வெளியீட்டு விழா, மிகவும் சிறப்புற நிகழ்ந்தது. ஷை கோயிலின் பரம்பரை அறங்காவலர் **மணலி திரு S. இராமகிருஷ்ண முதலியார், B. A.** அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினார்கள்.

நமது அறநிலையத் துறை ஆணையர் **திரு M. S. சாரங்கபாணி முதலியார், B. A., B. L.** அவர்கள், சைவ சமயத்துக்குத் திருமுறைகளைப் போல வைணவ சமயத்துக்கு நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் முதன்மையும் சிறப்பும் வாய்ந்தது என்று குறிப்பிட்டு, நூல் நல்ல முறையில் ஆராய்ந்து அச்சிட்டு வெளியிடப்பெற்றமை குறித்துத் தம் பாராட்டுரைகளைத் தெரிவித்தார்கள்.

அறநிலைய அமைச்சர் **திரு. M. பக்தவத்சலம் B. A., B. L.** அவர்கள் நூலை வெளியிட்டுப் பேசுகையில், ஆழ்வார்கள் அருளிச் செய்த பாசுரங்கள் பக்திச்சுவை நிரம்பித் ததும்புபவை என்றும், எளிய நடையில் உள்ள இந்தப் பாசுரங்களைக் கேட்பதே ஆனந்தம் தரும் என்றும், பக்தியை வளர்க்க வல்ல இப்பாடல்களை அன்பர்கள் முழுவதும் பாராயணம் செய்வது நல்லது என்றும் குறிப்பிட்டார்கள். மேலும், **மயிலை மாதவதாசன்** அவர்கள், ஒரு சிறந்த சிவபக்தர் என்றும், சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் செயலாளராக ஏறத்தாழ 25 ஆண்டுகள் விளங்கிய அவர்கள், வைணவ நூலைப் பக்தி சிரத்தையுடன் ஆராய்ந்து பதிப்பித்திருப்பது, ஒரு சிறந்த எடுத்துக்காட்டான பெருந்தொண்டு என்றும், சிவபக்தர்கள் வைணவத்தையும் வைணவர்கள் சைவத்தையும் வெறுக்க வேண்டிய அவசியம் இல்லை என்றும், இத்தகைய அருள் நூல்களை எல்லோரும் படிக்க வேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள்.

பின்னர்த் திவ்வியப் பிரபந்தங்களின் மகிமை பற்றிக் காஞ்சிபுரம் **மகாவித்துவான் ஸ்ரீ பி ப அண்ணங்கராசாரிய சுவாமிகளும்**, சைவ வைணவ சமரச நிலை பற்றிப் பேராசிரியர் **டாக்டர் திரு. மா. இராசமாணிக்கனார்** M A., M O L , Ph.D. அவர்களும் சொற்பொழிவாற்றினார்கள்.

அறநிலையத் துறைத் துணை ஆணையர் **திரு. D. இராமலிங்க ரெட்டியார், M.A.,B.L.** அவர்கள் அனைவருக்கும் நன்றியுரை வழங்கினார்கள்.

(ஈ) சிவசமவாதி கூற்று:—

யோக பாவனையும் பாச பசுஅறிவா யடங்குதலின், முதற்பொருள் அப்பாவகத்தைக் கடந்தது என்றது பொருந்தும். ஆன்மாப் பின் கூறப்படும் சாதனங்களில் நிற்றலால் பாசநீங்கும். பசுத்துவம் நீங்கிய காலத்தில் ஆன்மா முற்றும் உணர்தல் முதலிய எண்குணங்களும் பெறும் என்பது ஆகமங்களின் துணிபு. அம் முத்திநிலையில் ஆன்மாவின் அறிவு சிவஞானத்தோ டொத்த அறிவேயன்றிப் பசுவறிவன்று. ஆதலால் அவ்வறிவால் அறியப்படும் என்றல் பொருத்தமுடைத்து; தன்னருளால் பாவிக்க வேண்டா.

மறுப்பு:—முதல்வன் கண்ணைக்காட்டிச் செலுத்தும் ஆன்மாவைப்போல உயிர்க்குயிராய் ஒற்றுமைப்பட்டு நிற்கும் பொருளாகவின், அவன் ஆன்மாத் தன் அறிவால் அறியும்படி வேறுபட நில்லான்; மேலும் தன் அறிவுக்கு உள்ளுமாய் நுட்பமாய் நிற்பவன்; அதனாலும் அவன் ஆன்மாவால் அறியப்படான். கண் தனக்குக் காட்டாகி உள்நிற்கும் ஆன்மாவைத் தன் ஒளியாற் பற்றமாட்டாமை போல, ஆன்மாவின் அறிவும் தனக்குக்காட்டாகி உள்நின்று உணர்த்திவரும் முதற்பொருளைப் பற்றிநின்று ஆன்மாவிற்குக் காட்டமாட்டாது.

அறிய இரண்டல்லன்; ஆங்கறிவு தன்னல்
அறியப் படான்அறிவின் உள்ளான்-அறிவுக்குக்
காட்டாகி நின்றுனைக் கண்ணறியா மெய்என்
காட்டா(து) அறிவறிந்து கண்டு. [னக்

கண் அறியா மெய் என்ன—என்னும் எடுத்துக்காட்டை மெய் (தனக்குக் காட்டாகின்ற ஆன்மாவை) அறியாக் கண் என்ன—என இயைத்து உரைத்துக்கொள்க.

(எ) சிவாத்துவித சைவர் கூற்று:—

முதல்வனைத் தலைப்பட்ட ஆன்மா முதல்வனோடு ஒன்றாய்ப் போதலேயன்றி வேறு நிற்கு மாறின்மையின் தன்அருளால் உணரும் என்றல் பொருந்தாது.

மறுப்பு:—சத்தாகிய சிவம் மாயாவாதிகளால் கூறப்படுவது போலச் சொல்லொணாதது எனக் கூறப்படுவதன்று. 'இன்றெனக் கருளி இருள்கடிந்து உள்ளத்து எழுகின்ற ஞாயிறே போன்று—நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்' எனவும், 'தன்னை உன்னி என்னை ஆக்கிய போழ்தே யானவன் ஆயினேன்'' எனவும், ''இரந்திரந்துருக என் மனத்துள்ளே எழுகின்ற சோதியே'' எனவும் எழுந்துள்ள அனுபவ உரைகளில், முத்திநிலைக்கண் அறிபொருள் வேறு உண்டு என்பது துணியப்படுகின்றது. ஆகலின், முதல்வனை, ''அறிவொன்றற நின்றுஅறிவார் அறிவிற் — பிறிவொன்றற நின்றபிரான் அலையோ'' என்னும் அனுபூதியின்படி கண்பான்காட்சி காட்சிப்பொருள்மூன்றும் பரமுத்திநிலைக்கண் இருப்னுபிம் ஏனைய இரண்டும் தன்னுள் அடக்கிக்கொண்டு ஆன்மாவைத் தன்வண்ணஞ்செய்து தானேயாய் நிற்பது ஞேயமாகிய முதற்பொருள். ஆதலால், ஆன்மா முதற்பொருளோடு ஒன்றாய் நின்றே முதற்பொருளை அழுந்திநின்று உணர்ந்து இன்புறும். இங்ஙனமாதல்பற்றி முத்திநிலையில் ஆன்மாச் சிவமெனநிற்கும் என நூல்கள் கூறும். அதுபற்றிப் பொருள் ஒன்றே என்றல் கருத்தன்று.

அவனிவன் ஆன தவனருளால் அல்லது
இவனவன் ஆகான் என்றுந்தீபற
என்றும் இவனேயென் றுந்தீபற

என்னும் திருவுந்தி ஒப்பு நோக்கத்தக்கது.

அதுவென்னும் ஒன்றன்(று); அதுவன்றி வேறே
அதுவென் றறியறிவும் உண்டே;—அதுவென்(று)
அறிய இரண்டல்லன்; ஆங்கறிவுள் நிற்றல்
அறியுமறி வேசிவமும் ஆம். (தொடரும்)

## சைவ சித்தாந்த சாத்திர வகுப்பு

மயிலாப்பூர்ப் பின்னத்தூர் சுப்பிரமணியம் உயர்நிலைப் பள்ளியில், 8-3-63 முதல் 10-3-63 வரை மூன்று நாட்கள், பூம்புகார் சிவராஜ யோக மடம் ஸ்ரீ மாணிக்க வாசக ஞான தேசிக சுவாமிகள் அவர்களால் நடத்தப்பெற்றது. போற்றிப் பஃறொடை, நெஞ்சுவிடு தூது, உண்மை நெறி விளக்கம் ஆகிய மூன்று சாத்திரங்களைப் பற்றி வகுப்பு முறையில் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெற்றன. நமது அறநிலைய ஆணையாளர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார், B.A., B.L. அவர்களும் பிறரும் வந்திருந்து சிறப்பித்தார்கள். சித்தாந்த சாத்திர வகுப்புக் குழுவின் செயலாளர் திரு. அய்யா சுப்பிரமணிய முதலியார் அவர்கள் வரவேற்புரையும் நன்றியுரையும் கூறினார்கள். வகுப்பிற் பலர் கலந்துகொண்டு பயன் பெற்றார்கள்.

# ஸ்ரீவைஷ்ணவ குருபரம்பரை

[திரு. K. பட்சிராஜன், B.A., B.L., திருநெல்வேலி]

(முன் இதழ்த் தொடர்ச்சி)

அதன் பின் முதலிகள் அனைவரும் ஸ்ரீ ஆளவந்தாரின் சரம விக்கிரகத்தைத் தம் நெஞ்சிலே இருத்தியவராய் அவரைத் தண்டனிட்டு அவர் திருவடிகளை அவரவர் திருக் கண்களிலும், திருமார்பிலும், திருமுடியிலும் தரித்துக் கொண்டனர். இனி ஸ்ரீ ஆளவந்தாரை எழுந்தருளப் பண்ண வேண்டும் என்ற நிலை வந்ததும், அதுவரை அவர் சரம கைங்கர்யத்திலே லயித்து ஓரளவு தரித்திருந்த முதலிகளின் மனங்கள் இடிந்து போயின. அவர்கள் மேனி துவண்டுபோயின. மிடறு தழு தழுத்தன. கண்களில் சோக நீர் முட்டித் துளி துளியாக வீழ்ந்தன. அவர்கள் திருமூக்கின் உள்ளிருந்து வெளியேறும் வெவ்வுயிர்ப்பால் வியர்வை யரும்பி விரிந்தன. ஆசார்யரைப் பிரியப் பொறுதவராய்ப் பிரமை பிடித்து அவரை நோக்கிச் செயலற்றுக் கண்ணீர் பெருக்கி நின்ற அம் முதலிகளை அருகிலுள்ளார் கிட்டி அவர்கள் திருக் கண்களைத் துடைத்துத் தேற்றினர். அவர்களும் ஒருவாறு தேறி, மெல்ல மெல்ல நடையிட்டு ஸ்ரீ ஆளவந்தாரின் திவ்விய மங்கள விக்கிரகத்தை அழுத்தாது குலுக்காது மெல்லக் கைத்தலத்திலே ஏந்தி வந்து நன்கு அலங்கரிக்கப் பட்ட பீடப் பல்லக்கிலே எழுந்தருளப் பண்ணினர்.

அப்பால் அநுசந்தானங்களுடன் அப் பூப்பல்லக்கை முதலிகள் தங்கள் திருத் தோள் களிலே எழுந்தருளப் பண்ணிக் கொண்டு நிருத்த கீத வாத்தியங்கள் முழங்கப் புறப்படலாயினர். வேதபாரகர்கள் வேதங்கள் ஓதிச் சென்றனர். யாவருக்கும் முன்னே அருளிச் செயல் இயல் கோஷ்டி முழங்கிச் சென்றது. செல்வழி யெங்கும் சில ஸ்ரீ வைஷ்ணவர் பட்டுடைகளால் நடைபாவாடை விரித்துச் சென்றனர். வேறு சிலர் கரும்பும் குடமும் ஏந்திப் போயினர். மற்றுள்ளார் பூவும் பொறியும் ஏந்திச் சிதறினர். அத்திருப்பதியிலுள்ள மங்கலப் பெண்டிர் அனைவரும் மங்கள தீபம் ஏந்தி முன் சென்றனர். ஸ்ரீ ஆளவந்தார் திரு நாடலங்கரித்தார் என்பதை ஒற்றைச் சின்ன முழக்கம் அறிவித்துக் கொண்டே சென்றது. இவ்வித விருதுகளோடு அப்புறப்பாடு திருவீதிகள் தோறும் வலம் வந்து முடிவில் திருக்கரம்பன் துறையை அடைந்தது. அங்கு சென்றதும் முன்னம் ஈசான திக்கிலே தாபிதமாய் எடுத்தாளப்படாது விட்டு வைத்த ஸ்ரீ சங்கர்ஷண கும்ப தீர்த்தத்தால் ஒரு ரமணீயமான இடத்தைத் தூய்மைப் படுத்தித் திருப்பல்லக்கை எழுந்தருளப் பண்ணினர். அதன் பின் ஒரு துறவியை சம்ஸ்காரம் செய்ய வேண்டிய விதிகளின்படி செய்ய வேண்டியவற்றைச் செய்து ஸ்ரீ ஆளவந்தாரின் திவ்விய மங்கள விக்கிரகத்தைத் திருப்பள்ளி படுத்த ஆயத்தமாயினர்.

இவர்கள் இங்கே இவ்வாறாக, முன்னம் ஆளவந்தார் திருவாணையை ஏற்றுச் சென்ற பெரிய நம்பிகள் விரைவாகச் சென்று காஞ்சி நகரை அடைந்து, திருக்கச்சி நம்பிகளைத் தண்டனிட்டு வந்த விஷயத்தைக் கூறி, அவர் முன்னாகப் பேரருளாளன் ஸன்னிதியை அடைந்து ஆசார்ய நியமனப் படி அவரருளிய ஸ்தோத்திரத்தை அவர்ஸ்தானத்திலே, பேரருளாளன் திருமுன்பே ஸேவித்து ஸமர்ப்பித்து ஸ்ரீ அருளாளனின் திருவருள் பெற்றார். பின்னர் இளையாழ்வார் சாலைக் கிணற்றி லிருந்து திருமஞ்சன தீர்த்தம் கொணரும் வழியிலே நின்று ஆளவந்தார் அருளிய ஸ்தோத்திரங்களை வாய்விட்டு அநுஸந்தானம் செய்து கொண்டிருந்தார். அவ்வழியே திருமஞ்சனம் கொண்டு வந்த இளையாழ்வார் இவ்வநுஸந்தானக் குரல் கேட்டு நின்று கவனித்தார். அப்போது பெரிய நம்பிகள்,

"இந்திரன், பிரமன், சிவனெனும் தேவர்,
இவரினும் உயர்ந்திடும் முத்தர்,
தந்தம சீர்த்தி உனது சீர்க் கடலில்
திவலை யாம் தரத்ததோ? உன்பால்
அந்தமில் இயல்பில் உயர்வற அமைந்தே
அனைவர்க்கும் இறைவனும் நிலையை
எந்த வைதிகன் தான் ஒப்பிடான்? இதனை
இலையென்பார் மறைகளின் புறம்பே,"

என்று பொருள்படும் "ஸ்பாவிகா நவதிகா திசயேக் ருதத்தவம்" என்று தொடங்கும் ஆளவந்தார் ஸ்தோத்திரத்தில் உள்ள ஒரு ச்லோகத்தை அநுசந்தானம் பண்ணிக் கொண்டிருந்தார். திருமஞ்சனத் தீர்த்தத் தோடு வந்து கொண்டிருந்த இளையாழ்வார் அதனைச் செவிமடுத்து, பெரிய நம்பிகள் பால் வந்து "ஸ்வாமி இப்பொழுது ஒரு ச்லோ கத்தை அநுசந்தானம் செய்தீரே அது எந்த மகானால் அருளப்பட்டது?" என்று வின வினார். பெரிய நம்பியும் தம்முடைய முயற்சி பலனளிக்க அருளாளன் கிருபை கிட்டியதாக உணர்ந்து இளையாழ்வாரை நோக்கி "இது ஸ்ரீ ஆளவந்தார் அருளிச் செய்தது" என்று பதிலிறுத்தார். இளையாழ்வார் என்ன கம்பீர மான வாக்கு! எத்துணை சத்தியமான வாக்கு! அந்த மகானை அடியேன் சேவிக்க முடியுமா?" என்று கேட்டார்.

பெரிய நம்பியும் உள்ளத்தே மகிழ்ச்சி யூற "ஆகா! சேவிக்கலாம். அவரும் உம் மைக் காணவேண்டும் என்றே திருவுள்ளம் பற்றி இருக்கின்றார். அவர் திருமேனி இப்போது சரியானபடி யில்லை. அதனால் இப்பொழுதே எம்முடன் வந்து சேவிப்பது நல்லது" என்று கூறினார். இளையாழ்வாரும் "சுவாமி அவரைச் சேவிக்க வேணும் என்று அடியேன் உள்ளத்திலே ஒரு துடிப்பு வளர்ந்து கொண்டே வருகிறது. அடியேன் அருளாளனிடம் விடைபெற்று இப் பொழுதே தேவரீருடன் வருகிறேன்" என்று விண்ணப்பித்துத் திருமஞ்சன தீர்த்தத்தைப் பேரருளாளன் சன்னதியிலே சேர்த்துவிட்டுப் பெருமாள் திருமுன்பே நின்று தம்முடைய ஆசையை அவரிடம் சமர்ப்பித்துச் சன்னதியி லிருந்து விடை கொண்டார். அப்பால் நேரே திருக்கச்சி நம்பியாரிடம் சென்று அவரைத் தண்டனிட்டு நடந்தவற்றை யெல்லாம் விண்ணப்பம் செய்து அவர் அனுமதியைக் கோரினார். அவரும் கருமங்கள் "ஓர் எண் தானும் இன்றியே வந்தியலுமாறு" தெளிந்து உளமகிழ்ந்து நிறைந்த ஆசியோடு இளை யாழ்வாருக்கு விடை கொடுத்தார். இளை யாழ்வாரும், பெரிய நம்பியைச் சேர்ந்து இனித்தாமதமின்றி நாம் செல்வோம் என்று கூற, இருவரும் கச்சியிலிருந்து கோயிலை நோக்கிப் புறப்பட்டார்கள்.

போகும் வழியிலே பெரியநம்பிகள் இளையாழ்வார்க்கு ஸ்ரீ ஆளவந்தாரின் அருமை பெருமைகளை எல்லாம் விளங்கக் கூறிக் கொண்டே சென்றார். முன்னம் ஆளவந்தார் காஞ்சிக்கு எழுந்தருளி இளை யாழ்வாரைக் கடாக்ஷித்தமை இளையாழ்வார் அறியார். அந்த விருத்தாந்தத்தைப் பெரிய நம்பிவாயிலாகக் கேட்டபோது இளையாழ் வாருக்குத் திருமேனி புளகித்தது. கண்ணில் நீர் பெருகிற்று. "அடியேனை ஆட்கொள்ள வந்தவரை அறியாதே இருந்து விட்டேனே! "பழுதே பலபலவும் போயினவே" நாட்க ளெல்லாம். ஸ்வாமி! என் உள்ளத்தே ஏதோ ஒரு பயம் கவிகிறது. ஆளவந்தார் ஸேவை அடியேனுக்குப் பிராப்தமாமோ என்று ஏங்குகின்றது அடியேன் உள்ளம். நாம் கடுகவே செல்வோம்" என்று விரைந் தார் இளையாழ்வார். பெரிய நம்பிகளும் பயப்பட வேண்டாம் இளையாழ்வாரே. ஆளவந்தாரே உமக்கு ஸேவை ஸாதிக்க வேண்டும் என்று திருவுள்ளம் பற்றித்தானே உம்மை அழைத்துவர என்னை அனுப்பினர். அவருடைய கடாக்ஷம் தேவரீர் பேரில் பூர்ண மாக அன்றே விழுந்து விட்டது. எப்படி யும் அவருடையஸேவை உமக்குக்கிட்டும்." என்று கூறித் தேற்றினார். இளையாழ்வார் "ஸ்வாமி! பெருங் கேழலார்தம் பெருங் கண்மலர்ப் புண்டரீகம் நம் மேல் ஒருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம்" என்று ஆழ் வார் ஸாதித்தபடி அவர் என்னவோ என்னைப் பூர்ண கடாக்ஷ தீக்ஷை செய்து விட்டார். ஆனால் அக் கடாக்ஷ வீக்ஷண் யத்தை உணர்ந்து பெற வேண்டிய பலனை அடியேன் பெறாதே கழிந்து விட்டதே! அவர் திருமேனி நோவு சாத்தியருளியிருப் பதாகத் தேவரீர் கூறவில்லையா! தேவரீர் அவர் ஸன்னதியை விட்டு நாட்கள் பல வாயிற்றே! மேலும் அங்கு நடந்த சில நிகழ்ச்சிகள் அவரை அழைக்கப் பெருமாள் வீடுதிருத்தத் தொடங்கியமை போன் றல்லவா படுகிறது. அவர் திவ்விய மங்கள விக்கிரக ஸேவை யாயினும் "உறுமோ பாவி யேனுக்கு" என்று தழுதழுக்கக் கூறினர். நம்பியும் அவரைத் தேற்றிக் கொண்டேவர இருவரும் திருவரங்கத்துக்கருகே வந்து விட்டனர். திருக் கரம்பந்துறையிலே ஒரு பெருங்கூட்டம் காணப்பட்டது. அங்கு என்ன இவ்வளவு கூட்டம்! எனப் பெரிய நம்பிகள் ஐயுறு மளவிலே எதிராகச் சிலர் அவர் அருகே வந்தனர். அவர்களை நோக்கி

"அது என்ன கூட்டம்" என வினவினர். அவர்கள் "என்ன சுவாமி இப்படி கேட்கிறீர்கள்?" ஸ்ரீ ஆளவந்தார் பரமபதித்து விட்டாரல்லவா! திருப்பள்ளி படுத்துகிருர்கள்" என்று பதிலிறுத்தனர். நின்ற பெரிய நம்பிகள் ஹா! என்று வேரற்ற மரம்போலக் கீழே சாய்ந்தார். சாய்ந்தவர் பலவிதமாகப் புலம்பிக் "கையால் நிலந் தடவிக் கண்ணீர் மெழுகுவார்." அருகில் நின்ற இளையாழ்வாரும் மிகவும் சோகித்தவராய் அனைத்தையும் பறிகொடுத்துத் திக்பிரமை கொண்டு விழிப்பாரைப் போலப் பரக்க விழித்தவராய் ஸ்ரீ ஆளவந்தார் இருந்த திசையும் நோக்க அஞ்சி மறுபுறம் முகத்தைத் திருப்பியவராய்க் கண்ணீர் சோர இருந்தார். நம்பிகள் சிறிதே தேறியவராய் இளையாழ்வாரின் நிலையைப் பார்த்தார். வாளேறு பாயத் தேளேறு மாயுமா போலே இளையாழ்வாரின் துக்க மிகுதியைக் கண்டு, தன் துக்கத்தை ஒருவாறு அடக்கி, இவ்விளம் உள்ளம் பெரும் சோகம் தாங்க வல்லதன்று என்று கொண்டு, அவரை அப்படியே ஆரத்தழுவி அவரைப் பலவித மாகத் தேற்றினுர். இளையாழ்வாரே! ச்ரேயாம்சி பஹூநி விக்நாநி (நற்காரியம் செய்யப் புகின் தடைகள் பலஉண்டாம்) என்ற நியதி நீர் அறியாததன்று. "உமக்கும் நமக்கும் பிராப்தம் இருந்தது அவ்வளவே" என்று நாம் நம்மைத் தேற்றிக் கொள்வதல்லது வேறு என் செய்வது? இவ்விழவு ஏற்படுமோ என்று உம்முடைய உள்ளத்திலேயே சங்கை ஏற்பட்டு விட்டதல்லவா! மெல்ல எழுந்திரும். ஸ்ரீ ஆளவந்தாரைத் திருப்பள்ளி படுத்துமுன் அவர் திவ்விய மங்கள விக்ரஹத்தைச் சேவிக்கும் பேற்றையாவது பெரிய பெருமாள் கிருபை செய்கிருரா பார்ப்போம்! என்று கூறி இளையாழ்வரை மெல்லத் தூக்கி நிறுத்தினுர். ஸ்ரீ ஆளவந்தாரின் விக்ரஹத்தைச் சேவிக்கும் வாய்ப்பாவது கிட்டலாமே என்ற ஒரே நம்பிக்கையால் இளையாழ்வாரும் சற்று மனம் தேற இருவரும் ஓட்டமும் நடையுமாக அந்த ஜனத் திரளை நோக்கிச் சென்றனர்.

இப்படி இவர்கள் இருவரும் ஓடோடி வருவதைக் கண்ட ஸ்ரீ வைஷ்ணவத்திரள் தம்முள் விலகி இவர்கட்கு வழிவிட, இருவரும் ஸ்ரீ ஆளவந்தாரின் திவ்விய விக்கிரகம் எழுந்தருளப் பண்ணி யிருக்கிற விடத்து ஏறச் சென்று அப்புண்ணியத் திருமேனியின் திருவடியிலே வீழ்ந்து தெண்டனிட்டனர். பெரிய நம்பிகள் எழுந்து, இன்னும் தெண்டனிட்டே கிடந்த இளையாழ்வாரை மெல்லத் தூக்கி நிறுத்தி "உம் மனக்குறை தீர ஸ்ரீ ஆளவந்தாரை ஸேவித்துக்கொள்ளும்" என்று அவரை ஸ்ரீ ஆளவந்தார் திவ்விய திருமேனியருகே கொண்டு போய் நிறுத்தினுர். இளையாழ்வார் மனத்திலே தேங்கியிருந்ததுக்கம் ஒருவாறு குறைந்தது. அவர் தம் திருக்கண்களை மலரவிழித்து ஸ்ரீ ஆளவந்தார் திருமேனி "அழகு அருநறவாகக் கண்ணும் உள்ளமும் களிப்புற" அத்திருமேனியை நிதானமாகப் பாதாதி கேசமாக அநுபவித்தார். அப்போது அவ்விக்கிரகத்தின் வலதுதிருக்கையில் மூன்று விரல்கள் எதையோ விரல் முடக்கி எண்ணியது போல முடங்கியிருப்பதைக் கண்ணுற்ருர் இளையாழ்வார். உடனே கூடி நின்ற ஸ்ரீ வைஷ்ணவர்களை நோக்கி, "முன்பே இவருக்கு இப்படி விரல்கள் முடங்கி யிருந்தனவோ?" என்றுவினவினர். அதுவரை அவ்விக்கிரகத்திலே இப்படி இருந்ததைக் கவனியாதே இருந்த முதலிகள் இளையாழ்வார் காட்டக்கண்டு வியப்பெய்தியவராய் முன்பு இப்படி இருந்ததில்லையே என்று கூறினர். இளையாழ்வார் யோசனையிலாழ்ந்தார். இப்படி இருப்பதற்கு ஏதேனும் காரணமிருக்கவேண்டும் என்று எண்ணியவராய் முதலிகளை நோக்கிப் பெரியோர்களே! இவ்விரல் முடக்கம் இயல்பில் வந்த தன்று. ஸ்ரீ ஆளவந்தார் திருவுள்ளத்திலே ஓடியிருந்த சில ஆசைகள் பூர்த்தியாகாது போயிருக்கவேண்டும் என்று அடியேனுக்குத் தோன்றுகிறது. அவர் கோஷ்டியிலே அவருக்கு அந்தரங்கர்களாய்ப் பழகியவர்கள் அவர் திருவுள்ளம் எவற்றை மிகவும் ஆசைப் பட்டிருந்தது என்று கூறியருள வேணும்! என்று கைகூப்பிப் பிரார்த்தித்தார். முதலிகள் "ஸ்வாமி! ஸ்ரீ ஆளவந்தார் வெளிப்படையாக எதுவும் கூறவில்லை. ஆயினும் அவர் காலக்ஷேபங்களிலும் மற்ற சமயங்களிலும் அடிக்கடி கூறுவன சில உள. ஸ்ரீ வ்யாஸ பராசரர் களிடத்திலே அளவற்ற நன்றியுணர்வு; ஸ்ரீ நம்மாழ்வார் பக்கலிலே எல்லையில்லாத ப்ரேமையும் வியப்பும் கொண்ட ஒரு உள நிலை; ஸ்ரீ வேத வியாசரின் பிரம்ம சூத்திரங்களுக்கு விசிஷ்

டாத்வைத மதச்சார்பிலே ஒரு தெளிந்த வியாக்கியானம். இம் மூன்றையும் அவர் அடிக்கடி கூறி இவற்றை முற்றும் அநுப வித்து நிலை பெறுமாறு செய்ய ஓர் உசாத் துணையும் காலமும் பெற்றோ மில்லையே'' என்று பல முறை கூற நாங்கள் கேட்டிருக் கிறோம் என்றுரைத்தனர். இளையாழ்வார் திருவுள்ளத்துக்கு ஸ்ரீ ஆளவந்தார் திரு வுள்ளம் ஆசைப்பட்ட மூன்று விஷயங் களின் சிறப்பும், ஏற்றமும் தெற்றெனப் பட்டது. உடனே உள்ளத்தில் ஓர் முடி வுக்கு வந்தவராய் இளையாழ்வார் தம் சோதி வாய் மலர்ந்து "ஸ்வாமிகாள்! அடியே னுடைய இந்த தேகமும் திடமாயிருந்து, இதோ நமக்கெல்லாம் இன்னமும் ஸேவை ஸாதித்துக் கொண்டிருக்கும் இப்பரமாசாரி யரின் கிருபையும் இவ்வெளியேன்பால் நிறைந்து நின்று, எல்லாம் கூட்டிவைக்கும் ஸர்வேச்வரனும் இவ்வேழையின் நினைவை உடன் நின்று கூட்டிவைக்கத் திருவுள்ளம் பற்றுவானாகில் இம்மகானுடைய அம்மூன்று அபிலாஷைகளையும் அடியேன் நிறை வேற்றக் கடவேன்'' என்று வலக்கையை உயர்த்திப் பிரதிக்ஞை செய்தார். கோஷ்டி யிலே ஒரே ஆரவாரம்! அதோ! அதோ! என்று ஒவ்வொருவரும் ஆளவந்தாரைச் சுட்டினர். இளையாழ்வாரும் கூப்பிய கைய ராய் ஆளவந்தார் திருமேனியை ஸேவிக்க, என்ன விந்தை! மெல்ல விரிந்த அம் மூன்று முடங்கிய விரல்களும் நன்றாய் நிமிர்ந்தன. இந்த அதிசயத்தைக் கண் கூடாகக் கண்ட ஸ்ரீ வைஷ்ணவப் பெரியோர் அனைவரும் இளையாழ்வாரை நோக்கி "ஸ்வாமி! கண் டோம்!! கண்டோம்!! கண்ணுக்கினியான கண்டோம்!!! இளையாழ்வாரே! இவர் பரி பூர்ணகிருபையும் உம்மிடத்திலே உண்டு; இம் மகானுடைய திவ்விய சக்தியும் உம் மிடத்திலே கூடும்; நீரே இனி இந்த தரி சனத்துக்கு நிர்வாஹகருமாவீர்'' என்று கை கவித்து இளையாழ்வாரை மங்களா சாஸனம் செய்தனர்.

பின்னர் இளையாழ்வார் ஸ்ரீ ஆளவந்தா ரின் சரம விக்கிரகத்தை அடி முடியாக நன் ருக ஸேவித்து அத்திருவுருவம் "என் கண் ணுள்ளும் நெஞ்சுள்ளும் நீங்காவே'' என் னும்படி அவ்வுருவைத் தம் திருக்கண்களி லும் திருவுள்ளத்திலும் தேக்கிக்கொண்டார். ஸ்ரீ ஆளவந்தார் திவ்விய திருமேனிக்கு அப் பால் செயற்குரியவை யாவும் செய்து அம் மங் கள விக்கிரகத்தை முதலிகள் திருப்பள்ளி படுத்திப் பின் செய்யவேண்டிய செயல்க ளனைத்தும் செய்தருளினர். ஸ்ரீ ஆளவந்தார் ஜீவந்தராக இந்த விபூதியிலே (உலகிலே) எழுந்தருளியிருந்த காலத்தே அவரைத் தாம்

---

## பாஞ்சராத்திர தீக்ஷை

—:※:—

மதுராந்தகம், ஸ்ரீ அஹோபில மடத்தில் 1963ஆ மார்ச்சு 20உ கீழே குறிப் பிட்டுள்ள ஸ்வாமிகள், காஞ்சீபுரம், ஸ்ரீ தேவராஜ ஸ்வாமி தேவஸ்தானம், பரம்பரை அர்ச்சகர் ஸ்ரீஉப. (தேனமலையூர்) ஸ்ரீ பாஞ்சராத்ரம், வரதராஜ பட்டர் என்கிற மாதவ பட்ட ரிடம் ஸ்ரீ பாஞ்சராத்ர சக்ராப்ஜ மண்டல தீக்ஷை பெற்றுக்கொண்டனர். தீக்ஷா கார்யங்கள் முடிந்தவுடன் ஸ்ரீ உப வரதராஜ பட்டர் கீழே குறிப்பிட்டுள்ளவர்களும் தீக்ஷை பெற்றுக் கொண்டவர்களுமான ஸ்வாமிகளுக்கு யோக்யதா பத்ரமும் வழங்கினர். ஸ்ரீ பாஞ்சராத்ர ஆகம முறைப்படி பூஜை நடக்கும் எல்லா தேவாலயங்களிலும் இவர்களுக்கு பூஜை முதலிய வைதிக கர்மாக்கள் செய்ய யோக்யதை உண்டு என்று குறிப்பிட்டுள்ளார்.

தீக்ஷை பெற்றுக்கொண்டவர்கள் :—

1. ஸ்ரீ உப வித்வான் ஈச்சம்பாடி தி. ராமஸ்வாமி அய்யங்கார் ஸ்வாமி, M.A., L.T., ப்ரின்ஸ்பால், ஸ்ரீ அஹோபில மடம் ஸம்ஸ்க்ருத காலேஜ், மதுராந்தகம். 2. ஸ்ரீஉப அன்னு தூர் ராகவாச்சாரி ஸ்வாமி, ஆராதகர், ஸ்ரீ அஹோபில மடம், மதுராந்தகம். 3. ஸ்ரீ உப A. K. வரதாச்சாரி ஸ்வாமி, மதுராந்தகம். 4. ஸ்ரீஉப P. V. தேஹளீசாச்சார் ஸ்வாமி, மதுராந்தகம். 5. ஸ்ரீஉப. செ. கி. வரதாச்சார் ஸ்வாமி, ஆராதகர், ஸ்ரீ நம்மாழ்வார் ஸந்நிதி, (ஸ்ரீ அஹோபில மடம்) சின்ன காஞ்சிபுரம். 6. ஸ்ரீஉப. A. S. பார்த்தஸாரதி அய்யங்கார் ஸ்வாமி, 7. ஸ்ரீஉப. V. T. வேதாந்தாச்சார் ஸ்வாமி.

ஸேவிக்காது, அவரிடம் நேரே அர்த்த விசேஷங்கள் கேளாது போய்விட்டாமே என்ற அங்கலாய்ப்பு இளையாழ்வாருக்கு! தான் அவரை ஸேவிக்கப் புறப்பட்டுக் கடுகிவந்தும் தம் அபிலாஷை (விருப்பம்) நிறைவேற வழியின்றித் தாம் படிந்து குடைந்தாடிப் பருகிக் களிக்கவுன்னிய யாமுனப் பிரவாகத்தைத் தன்னில் முன்னம் பாரித்துப் பெரியபெருமாள் முற்றப்பருகி விட்டனரே என்று நம் பெருமாள் பாடே குறைகண்டது இளையாழ்வார் உள்ளம். ஆளவந்தாரைப் பள்ளிபடுத்திய பின் அவப்ருத ஸ்நானம் (தொடங்கிய கருமம் முடிந்த பின் செய்யும் விசேட நீராடல்) செய்து இளையாழ்வார் பெரிய நம்பிகளைத் தெண்டனிட்டுக் காஞ்சிக்கு விடைகொண்டார். பெரிய நம்பிகள் "இவ்வளவு தூரம் வந்தவர் பெரிய கோயில் சென்று பெரிய பெருமாளைச் சேவியாது போகலாமா? இருந்து ஸேவித்துப்போம்'' என்றார். ஆனால் இளையாழ்வார் ஸ்வாமீ! அடியேனுக்கு ஸ்ரீ ஆளவந்தாரை ஜீவந்தராக ஸேவிக்க முடியாதபடி அவரை அடியேன் வருமுன்பே பெரிய பெருமாள் தன் வீட்டுக்கழைத்துக் கொண்டாரே என்று அடியேன் உள்ளம் குறையுற்று நிற்கிறது. இம்மன நிலையில் நம் பெருமாள் ஸன்னிதி போவேனானால் என்னை மீறிப் பகவதபசாரம் நிகழ்ந்து விடுமோ என்று அடியேன் அஞ்சுகிறேன். இம்மன நிலையோடு பெரிய பெருமாளை ஸேவிக்கவல்ல நெஞ்சுரம் இப்போது அடியேனுக்கில்லை. மன்னிக்கவேணும்'' என்று கூறிக் காஞ்சி நோக்கிப் புறப்பட்டார்.

வழியெங்கும் ஆளவந்தார் பிரிவே அவர் மனத்தை அழுத்தி வருத்த, அக் கையறவுத் துன்பம் நிறைந்த மனத்தோடு கச்சிநகர் சேர்ந்த இளையாழ்வார் நேரே திருக்கச்சி நம்பிகள் திருவடிகளிலே போய் வீழ்ந்து ஆளவந்தார் மறைவை அவருக்குக் கூறி அவர் திருவடிகளிலேயே புலம்பிக்கொண்டு கிடந்தார். திருக்கச்சி நம்பியும் இச்செய்தி கேட்டு மிக வருந்தினார். சிறிது நேரத்தே தம்மைத் தேற்றிக்கொண்ட நம்பிகள் இளையாழ்வார் தம் திருவடியிலே புலம்பிக்கிடப்பதைக் கண்டு அவரை அப்படியே வாரித்தழுவி எடுத்துத் தம் மார்போடணைத்து ஸ்ரீ பரதாழ்வானைப் பெருமாள் தழுவித் தடவிச் சோகம் போக்கினாற் போன்று இளையாழ்வார் முதுகைத் திருக்கையால் பன்முறை தடவி, தம் இனிய இதமொழிகளால் அவரைத் தேற்றியருளி, அவரை நோக்கிப் "பேரருளாளன் எல்லாமறிவனாதலாலும் எல்லாம்வல்லனாதலாலும் உம்முடைய எண்ணங்களை ஈடேற்றாமல் போகான்! அதனைத் தலைக்கட்டியே தீர்வன். அஞ்சவேண்டாம் இளையாழ்வாரே!'' என அவருக்குத் திடம் ஊட்டியருள இளையாழ்வாரும் சிறிது தேறினார். பின்னர் திருக்கச்சி நம்பிகள் தாம் ஒருமுறை ஸ்ரீ ஆளவந்தாருக்கு ஸ்ரீ சூர்ணபரிபாலனம் செய்து வெகு விமரிசையாக ஒரு திருவத்யயன உற்சவம் (நினைவு விழா) கொண்டாடியருளினார். இளையாழ்வாரும் மெல்ல மெல்ல மனம் திடமுற்றவராய்ப் பேரருளாளனை ஸேவித்து அவருக்கு முன்போலவே திருமஞ்சன கைங்கர்யம் செய்து வந்தார்.

இங்ஙனம் நாள் பல கழிந்துகொண்டே வந்தன. தினமும் பேரருளாளன் ஸன்னதி செல்லும் இளையாழ்வாருக்கு நம்பிகளிடம் பேரருளாளன் வைத்த விசேட அன்பிலே ஒரு தனித்த வியப்பும் மதிப்பும் ஏற்பட்டு அது நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வந்தது. பேரருளாளனுக்குக் கைங்கர்யம் செய்வதையே ஒரு உறுதிப் பொருளாக மதித்து இளையர்ழ்வார் ஒழுகி வருவதை நாடோறும் கவனித்து வந்த திருக்கச்சி நம்பிகளுக்கும் இளையாழ்வார் பக்கத்திலே ஒரு தாய்க்குக் கன்றின்பாலுள்ள பாசம் போன்ற ஒரு அன்பு உள்ளே கனிந்து வந்தது. இளையாழ்வாருக்கு நம்பிகளிடம் தோன்றிய பக்தி மிகவும் முறுகவே அவரையே தன் ஆன்மா உய்ய வழிகாட்டும் ஆசார்யனாகப் பற்ற வேண்டும் என்ற அவா அவர் உள்ளத்தே அரும்பி மலர்ந்தது. ஆகவே ஒருநாள் அவர் நம்பிகள் திருவடிகளிலே தண்டனிட்டு "ஸ்வாமீ! அடியேனைத் தேவரீர் திருவடி சம்பந்தியாக்கி (சிஷ்யனாக ஏற்று) அடியேனுடைய ஆன்மாவை உஜ்ஜீவித்தருள வேண்டும்' என்று பிரார்த்தித்தார்.

திருக்கச்சி நம்பிகள் திகைத்தேபோனார். தன் பக்கலிலே இளையாழ்வாருக்கு அன்பும் மதிப்பும் அதிகம் என்பதை நம்பிகள் உணர்ந்திருந்தவரேயானாலும், இத்தகைய ஒரு நிலை நேரும் என்பதை அவர் எதிர்பார்த்திருந்தவரேயல்லர். எனவே அவர் வியப்பும் திகைப்பும் எய்தியவராய் ஒன்றும் பேச வகையறியாது சிறிது நேரம் வாளாவிருந்தார்.

(தொடரும்)

# திருஞான சம்பந்தர் அருளிய திருமுறை

[முதுபெரும் புலவர். திரு. சிவஞானத் தம்பிரான் சுவாமிகள், திருவெண்காடு]

(முன் இதழ்த் தொடர்ச்சி)

திருஞான சம்பந்தர் தமது புனித வாய் மலர்ந்து அழுதது எப்பயனை விளைத்தற் பொருட்டு? சைவர்க்குச் சிறப்பாயும் ஏனையோர்க்குப் பொதுவாயும், பிறவிப் பெருங்கடலைத் தாண்டிப் பேரின்பக்கரை யேறும் பேறு வெவ்வேறு வகையில் எய்தற் பொருட்டாகும். அவ்வகையே இம் முதற்றிருச்செய்யுளில் முத்திறமாக அடக்கிக் கூறப்பட்டது. திருவாய் மலர்ந்தழுத தன் பயனாக முதலில் நின்றது வேதநெறி தழைத்தோங்கும் ஓக்கம். அடுத்து நின்றது மிகு சைவத்துறை விளக்கம். வேத நெறி தழைத்தோங்கின், சைவத் துறை விளங்கும். அது விளங்கின் எது பொலியும்? இருளிற் பொலிவற்றுக் கிடந்த பொருள் விளக்கி னொளியில் விளங்கித் தோன்றும் பொலிவையுற்றுக் கிடக்கும். அத்தகைப் பொலிவு பெற்றுத் தோன்றும் பேறு பூத பரம்பரைக்கு வாய்த்தது, திருஞான சம்பந்தரது திருவாய் மலர்ந்தழுத அழுகையால். பூத பரம்பரை, மிகு சைவத் துறை விளக்கத்தால், பொலிவுறும் முன்னர், எந்நிலையில் பொலிவற்றுக் கிடந்தது? சிவநெறி விளக்கம் பெற்றிலாது ஆணவ காரியமான அஞ்ஞான இருளிற் பொலிவற்றுக் கிடந்தது. அவ்விருள் நீங்கிப் பொலிவுற்றது பூதபரம்பரை. அது மூன்றாவது பயன் ஆயிற்று. ஆகவே, அருண்மொழித் தேவர், புராணத் தொடக்கத்தில் சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர், வேதநெறி தழைத்தோங்கவும், மிகு சைவத் துறை விளங்கவும், பூத பரம்பரை பொலியவும் தம் புனித வாய் மலர்ந்தழு தருளினார் என்றார்.

**"சும்மா இருப்பவர்பால் தோன்றுஞ் சுடரொளி [யைப்**
**பெம்மான் இவனென்ற பேராள!—அம்மை**
**முலையுண் டழுத முதல்வா பிறப்பில்**
**அலையுண் டலைந்தேன் அற."**

என்றதில், பிறவித் துன்பம் தீர்தல் அம் முதல்வர் அழுததன் பயன் எனக் குறித்தது காண்க. பூத பரம்பரைக்கு இதுவே முடிந்த பயன். பொலிவின்மை, பிறப்புக்களாலும், பொலிவு, பிறவாமையாலும், பூத பரம்பரைக்கு எய்தும். திருவருட் பொலிவும் கருவிருளின் பொலியாமையும் இங்குப் பொருந்தும். பொல்லாமை-பொலிவுறாமை, 'இமயப் பொருப்பகஞ் சேர்ந்த **பொல்லாக் கருங் காக்கை**யும் பொன்னிறமா யிருக்கும்'. இங்கும் பொன்னிறம் இல்லாத கரிய காக்கை என்றே பொருள் கொள்ளல் வேண்டும். (பொல்லா -) இழிந்த எனல் ஆசிரியர் கருத்துக்கு வேறாகும். உவமைக்கும் பொருளுக்கும் ஒத்த பொருட்டும் அன்று. பொல் என்பது பொன் என்றாயிற்று. அம் ஈறு பெற்றுப் பொலம் என்றாதலால் அது புலப்படும். பொலிதல் என்பதற்குப் பொன்னைப் போல ஒளிர்தல் என்பதே பொருள். 'பொல்லாத ஆணவம்' 'பொல்லா முயலகன்' என்பவை முதலியவற்றிற்கும் அதன் இருள் நிறங் கருதியவாற்றாற் பொருள் கோடல் வேண்டும். தீமை குறித்த பொருள் (அச் சொல்லுக்குப்) பின் உற்றதே. பரஞ்சோதி முனிவர் விருத்த குமார பாலரான படலத்திலே இச் சொல்லை அப் பொருளில் ஆண்டது பலர்க்கும் தெரியும். பொலியாத என்றதன் மரூஉவே பொல்லாத என்பது. எதிர்மறையாய் பொல்லாத என்பதற்கு உடன்பாட்டுச் சொல், 'பொலி' என்னும் முதனிலை உடையதே ஆகும். ஆதலின், அதன் உண்மைப் பொருள் நன்கு விளங்கும்.

சீகாழியிலே அந்தணர்குடி முதல்வர்; வேதாசார சீலர்; கவுணியர் கோத்திரம் விளங்க (அவ்வழி) வந்தவர்; சிவபாத இருதயர் என்னும் உயரிய பெயர் வாய்ந்தவர்; 'அறவோர்' என்றதில் யாதும் ஐயுற வேண்டா ஒன்றும். அவ்வறத்தால், தாம் மட்டும் வாழ்தல் வேண்டும் என்று கருதும் இழிநிலை அவரின் அருகிலும் நிற்க மாட்டா தொழிந்தது. எல்லா வுயிரும் வாழ்தல் வேண்டும் என்னும் உயர்நிலைக்கு உறைவிடம் ஆனார். 'உலகு' என்றது உயி

ருள் பொருள் உயிரில் பொருள் ஆகும். இரு திறத்தையும் குறிக்கும். அவ் வுலகு என்னும் பொருளில், 'புவி' என்னும் சொல்லை ஆண்டு ஆண்டருளினார். 'சிவ பாத விருதயர் என்று உளரானார்' எனச் சொல்ல வந்த அருண்மொழித் தேவ நாய னார், 'என்று' என்றதற்கும் உளரானார் என்றதற்கும் நடுவில், 'இப்புவி வாழத் தவஞ் செய்யியல்பினார்' என, அவர் உள ராதலின் பயனை உலகோர் அறியச் செய் யத் தாம் உளங்கொண்ட விருப்பம் விரைந்து முந்திய உண்மையைத் தோற்றி யருளினார். புவி வாழத் தவஞ் செய் யியல்பு சிவபாத விருதயர்க்கு இருந்த ஒன்றே, சைவ சமயத்தில் தனிப் பேரா சிரியராகத் திருஞான சம்பந்தர் திருவவதாரம் புரியக் காரணமாயிற்று.

அதற்கும் ஒரு காரணம் உண்டு. திரு வவதார காரணம் அவர் தந்தையாரது இயல்பாய்ப் புவிவாழச் செய்யுந் தவம். அதாவது தவஞ் செய்யியல்பு புவிவாழ்தற் பொருட்டாதல். தவஞ்செய் இயல்பும் இயல்பாற் செய்யுந் தவமும் வெவ்வேறு. அவை முறையே ஏதுவும் பயனுமாம். புவிவாழத் தவஞ் செய்யும் இயல்பு அவர்க்கு எய்தியதன் காரணமும் இங்கு உணரத்தக்கது. அஃது யாது? அவர் அந்தணராவார்; மறைதேர்ந்த அரு ளொழுக்கத்த ராவார்; அவர்க்கு அவ் வியல்பு வரத் தடை என்ன? அத்தண் மைக்கும் மறைதே ரொழுக்கத்திற்கும் கோத்திரம் விளங்கவந்த பாத்திரச் சிறப் பும் பிறநலங்களும் அவரது இருதயத்தில் சிவபாதத்தை நிலைபெறச் செய்துவிட் டன. அவர் நெஞ்சம் அத்திருவடிக்கே இடமாய் விட்டது. அத் திருவடியும் அவர் நெஞ்சத்தை ஒருசிறிதும் பிறி தொன்றற்கு நினைப்பிடமாக்காது தனக்கே உரிய சருவமானியமாக்கிக் கொண்டது. அதனால், அவர் அகத்தை உணர்ந்த அக் காலத்து நன்மக்கள் அவரைச் "சிவபாத விருதயர்" என்று நெஞ்சார நினைந்து மகிழ்ந்து அவர்க்குக் காரணப் பெயராக வழங்கி வாழ்ந்தனர். இருதயத்திற் சிவ பாதமே அன்றி வேறு யாதும் இல்லாத பரிபூரணம் உணர்ந்த பெரியவர், அப் பாதானுபவம் பல்லுயிர்க்கும் உண்டாக வேண்டும் என்று நினைப்பது இயல்பு தானே! அவ்வியல்பே இப் புவிவாழத் தவஞ் செய்யியல்பாயிற்று. ஆகவே, சேக் கிழார் பெருமானார், அவ் வறவோர் உள ரானார் எனச் சொல்லி முடிப்பதற் கிடை யில், அவரது பெருங்கருணை நிலையைக் கூறி, அத்தகையோரே உலகில் உளராதல் வேண்டும் என்றார். அவ் விருப்பத்தைச் சமய வளர்ச்சிக் கண்ணால் நோக்கி உணர் தல் தக்கதே என்க. சிவபாதம் அவரது இருதயத்தில், வேறு எதற்கும் இடம் தாராமல் நிறைந்திருந்தது. இதையும் அச் 'சிவபாத விருதயர்' என்னும் திருப் பெயரினது காரணத்தையும் பகவதியாரது சிவபத்தியையும் விளக்க வேண்டி, சேக் கிழார் பெருமானார், "அரவணிந்த சடை முடியார் அடியலால் அறியாதுபரவும்" உண்மையை உணர்த்தியருளினார். இயல் பாகவே இருதயத்திற் சிவபாதத்தை அன்றி அயலாக மற்றெதையும் அறியாத பெருமைக்குரிய அவ் வந்தணர்க்கு வந்த மனைக்கிழத்தியாரும் தம் உறவால், அவ ரது அவ்வியல்பை, வேள்வித்தீயை வளர்க் கும் ஆனின் நெய் போன்று, கணவனார் கருத்தமைந்த மணவாட்டியராக விளங்கி வாழ்ந்தார். 'வாழ்க்கைத் துணை' என்றதன் உண்மைப் பொருள் அவ்வம்மையார்பால் முற்றுற அமைந்திருந்தது. 'திருமனையார்' 'வாய்ந்தமறை மரபின்வரு பெற்றியினார்' என்று போற்றினார் ஆசிரியர்! அவ் வந்தணரது இயல்பாற்செய்யும் தவத்தின் காரியம் ஆன 'திருஞானசம்பந்தரது திருவவதா ரம்' யாவர் பெற்ற பேருயிற்று? அவ் வம்மையார் பெற்ற பேறு அன்றோ? அப் பேற்றைத் தமிழுலகில் அம்மையார் தாம் பெற்றார். வேறு எவ்வுலகில் எவர் பெற் றார்? பெற்ற பெருமை முற்றும் உற்றவர் அவர் ஒருவரே ஆனார். ஆகவே, "எவ் வுலகும் பெறற்கு அரிய பெருமையினர்" எனப் போற்றும் நிலைக்கு அம்மையார் உரியார் ஆனார். போற்றும்நிலை ஆசிரியர்க்கும் வாய்த்தது. அவர்போல அடியேங்களுக் கும் அப் போற்றல் ஆகிய புண்ணியம் கிடைத்தது. 'எவ்வுலகும்' என்றதில், ஆடுஉவு(லகு)ம் மகடூஉவு(லகு)ம் அடங்கு மெனினும், மகடூஉப் பொருட்டே கொள் ளத்தக்கது. அம்மையாரது திருப்பெயர் 'பகவதி' என்பது. பொற்பும் கற்பும் மேம் படு சிறப்புடையவர்.

சிவபாத விருதயரும் பகவதியாரும் ஆகிய இருவரது மரபும் சைவநெறி வழி வந்தமையால், அவ் விருவர் உறவும் திருவருளுறவை வளர்த்துக் கொள்ளுஞ் சிறப்புற்றது. கவுணியர் கோத்திரத்திற் குத் தக்க சூத்திரம் "செப்பு(ம்) நெறிவழி வந்தார் சிவபாதவிருதயர்" "பகவதியாரும் கற்பு மேம்படு சிறப்பால் கணவனுர் கருத் தமைந்தார்" என்று முன் உணர்த்திப், பின், "மரபிரண்டுஞ் சைவ நெறிவழிவந்த கேண்மையினுர்" என்ருர் 'தொண்டர் சீர்பரவுவார்'. அக் கேண்மையால், அவ் விருவர் திருவுள்ளத்திலும், "அரவணிந்த சடைமுடியார் அடியலரல் அறியாது பரவுதிரு நீற்றன்பு பாலிக்குந்தன்மை" வளர்ந்தது. இவர் மனைவாழ்க்கை மறைவிதி வழாது, குறைவறு நிறைவுடன் யாவர்க்கும் வியப் புண்டாகி மேவியது.

அக்காலத்திலே, சிவபாத விருதயரது தவஞ்செய்யும் இயல்பு புவிவாழ்தற் பொருட்டு என்று முன் அறிந்தோம் அன்றே! அப் பொதுநெறித் தவம்புரியும் இயல்பு, தொடங்குங்கால் துன்பமாய் இன்பம் பயக்குங் கல்வியைப் போல்வ தொரு தன்மையதாயிற்று. உலகம் வாழ் தல்வேண்டும் என்ற நினைவும் ஆர்வமும் உடையார்க்கு அது வாழ்ச்சி பெற்ருல் மகிழ்ச்சி விளையும். இன்றேல் வருத்தம் உண்டாகும். வாழ்ச்சி பெருத ஒன்று, வீழ்ச்சி உறுவதொன்று. இரண்டும் இருப்பின் இடர்ப்பாடு எய்துவது இயல்பு தானே! சிவபாத விருதயர்க்கு உலகு வாழ் தல் வேண்டும் என்பது விருப்பம். உலகோ வாழ் நெறியில் இல்லை. வீழ் நெறியில் மிகுந்துளது. வாழ் நெறியி வில்லாமை யாவன இங்கு யாவை? "ஆதியருமறை வழக்கம் அருகி"யதும் "அரனடியார் பால் பூதிசாதன விளக்கம் போற்றல் பெரு தொழி"ந்ததும் ஆகும். வீழ்நெறி மிகுத லாவது புறப்புறச் சமயங்களின் பொய் மிகுதல். இருதயத்தில் உள்ளது என்றே னும் வெளிப்பட்டுத்தோன்றுதல் இயல்பு. இருதயத்தில் சிவபாதம் இருக்கின்றது. அது வெளிப்பட்டுத் தோன்றுதல் உறுதி.

அது வெளிப்படுதற்கு அடிப்படை யாய் நின்றது புவிவாழத் தவஞ் செய்யும் இயல்பு. அதன் தொடக்கமாக் வந்தது இடர்ப்பாடு. அவ் விடர்ப்பாடு விளையச் சார்பாயிருந்தவை (1) புறப்புறச் சமயப் பொய் மிகுதலும் (2) ஆதியருமறை வழக் கம் அருகுதலும் (3) பூதிசாதன விளக்கம் போற்றப் பெருதொழிதலும் ஆகிய முத் திறமும். அம் மூன்றும் தவம் புரிதற்கு ஏதுவாயின. ஏதமே இல்லாத சீர் மிக்க சிவபாத விருதயர் இவ் ஏதம் மூன்றும் உலகில் இருக்கக் கண்டதால், அவரது இருதயம் சிவபாதத்திற்கே இடமாயிருந்த நிலையிற் சிறிது தவிர்ந்து இடர்க்கும் இட மாயிறறு. இங்கே பெரிய புராணத் திரு விருத்தப் பாடலை உணர்தல் திருஞான சம்பந்தரது திருவவதார காரணம் இது தான் என நன்கு அறியச் செய்யும். ஆத லின் அதைக் குறித்தல் வேண்டும்.

"மேதினிமேற் சமண்கையர் சாக்கியர்தம்
பொய்ம்மிகுத்தே
ஆதியரு மறைவழக்கம் அருகிஅர
னடியார்பால்
பூதிசா தனவிளக்கம் போற்றல்பெரு
தொழியக்கண்
டேதமில்சீர்ச் சிவபாத விருதயர்தாம்
இடருழந்தார்."

சமண்கையரும் சாக்கியரும் தம் பொய்ப்பொருள் வழியை மெய்ப்பொருள் நெறியாக மிகைபடச் சொல்லி, உலகை வஞ்சித்துத் தம் மதத்தில் நம்மக்களைச் சேர்த்து விட்டனர் என்பதும், அதனல் முற்கூறிய முத்திறத்துள் அதுபோக ஏனைய இரண்டும் பெருகின. அம் முத் திறத்தையும் கண்டன. சிவபாத விரு தயமும் திருவிழிகளும். அக்காட்சி இடர்ப் படுத்தியது. இதைக் கூறிற்று இத் திருப் பாடல். கையரும் சாக்கியரும் தம் பொய் மிகுத்தனர். மிகுத்தமை காரணம். அருகி யதும் ஒழிந்ததும் காரியம். மிகுத்தே அருகி ஒழியக் கண்டு உழந்தார் என்று கொண்டுரைத்தல் வேண்டும். தம் பொய்யை மிகுத்தவர் தாம் என்பார் சமண்கையர் சாக்கியர் என்று எழுவா யாக்கினுர் ஆசிரியர். மிகுந்தே என்னுமை யின், இவ்வாறு உரைத்தல் வேண்டிற்று.

(தொடரும்)

# வைணவ ஆசார்யர் திருநாட்கள்

---

| பங்குனி | | ஏப்ரல் | |
|---|---|---|---|
| 21 | ... | 3 | ஸ்ரீ செல்வப் பிள்ளை |
| 25 | ... | 7 | ஸ்ரீ பிராட்டியார், நஞ்சீயர், ஸ்ரீரங்க நாச்சியார் |
| 26 | ... | 8 | திரு நாராயணப்பெருமாள், திருவரங்கத் தமுதனார். |
| **சித்திரை** | | | |
| 9 | ... | 22 | அழகிய மணவாளன் |
| 10 | ... | 23 | வடுக நம்பி |
| 15 | ... | 28 | ஸ்ரீ கிடாம்பி அப்புள்ளார், ஸ்ரீ எம்பெருமானார். |
| 16 | ... | 29 | சக்கரவர்த்தித் திருமகனார், முதலியாண்டான். |
| | | **மே** | |
| 22 | ... | 5 | தேவப் பெருமாள் |
| 24 | ... | 7 | அநந்தாழ்வான் |

---

# சைவ நாயன்மார் திருநாட்கள்

---

| பங்குனி | | ஏப்ரல் | |
|---|---|---|---|
| 19 | ... | 1 | கணநாதர் |
| 21 | ... | 3 | முனையடுவார் |
| 28 | ... | 10 | காரைக்கால் அம்மையார் |
| **சித்திரை** | | | |
| 5 | ... | 18 | ஸ்ரீ நடராஜர் அபிஷேகம் |
| 7 | ... | 20 | திருநாவுக்கரசர் |
| 11 | ... | 24 | சிறுத்தொண்டர் |
| 13 | ... | 26 | மங்கையர்க்கரசியார் |
| 15 | ... | 28 | விறன்மிண்டர் |



சென்னை இராயப்பேட்டை காண்ட்ராக்டர் சைவத் திரு. C. மாசிலாமணி முதலியார் அவர்கள் தம் திருப்பணியாக அமைத்துக் கொடுத்த திருமலைப் பாதையை, அறநிலைய அமைச்சர் அவர்கள் சிவராத்திரித் திருநாள் அன்று திறந்து வைத்தல். (22-2-63)



dited and Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments
s-34. Printed at Paari Achakam, Madras-1.